# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஏப்ரல் — 1979
சித்திரை



ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர் :: சென்னை-600 004.

விலை
ரூ-1

## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், பொன்மொழிகள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம்.** காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பட வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள், போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

---

## ஓர் அழைப்பு

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிக்கைக்குத் தற்சமயம் 245 ஊர்களில் பத்திரிகை விற்பனையாளர்கள் ஏஜண்டுகளாக நியமிக்கப்பட்டுள்ளனர். இப் பத்திரிகையின் மேல் ஈடுபாடு கொண்டுள்ள அன்பர்கள் 'அல்லது பத்திரிகை விற்பனையாளர்கள் ஏஜண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜன்சி எடுத்துப் பிரதிகளை விநியோகிக்க விரும்பினால், அதற்குரிய விதிமுறைகளை எங்களுக்கு எழுதிப் பெறலாம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

---

## சந்தாதாரர்களுக்கு

தங்களுக்கு பிரதிகள் அனுப்பப்படுவது சம்பந்தமாக ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்திற்குக் கடிதம் எழுதி பதில் பெற விரும்பும் சந்தாதாரர்கள், தங்கள் கடிதத்துடன் போதிய தபால்தலைகளை இணைத்து அனுப்புவது நலம்.

தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைக் கவனமாகச் சரிபார்த்துக் குறையிருந்தாலோ, முகவரி மாற்றம் செய்து கொண்டாலோ உடனுக்குடன் தகவல் தெரிவியுங்கள்

ஆங்கில மாத 15-ம் தேதி வரையிலும் தங்களுக்குப் பத்திரிகை வந்து சேராவிட்டால், கடிதம் எழுதி காரியாலயத்திற்குத் தகவல் தெரிவிக்கக் கோருகிறோம்.

---

## டெபாசிட் முறை

ஆண்டுதோறும் ரூ. 10 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டெபாசிட் செய்துவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று (குறைந்தது ஐந்து வருடங்களுக்குப் பிறகு) கருதும்போது தாங்கள் டெபாசிட் செய்த முழுத் தொகையாகிய ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். டெபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை.

நிர்வாகி

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி – 59 | ஏப்ரல் 1979 | இதழ்—4

## பொருளடக்கம்

# எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

### I. ராமகிருஷ்ணர்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | (அச்சில்) | |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 2 | 75 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதை | 0 | 35 |

### II. சாரதாதேவியார்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ சாரதா தேவியார் அவரது வரலாறும் திருவாக்கும் | (அச்சில்) | |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |

### III. சுவாமி விவேகானந்தர்

| | ரூ. | பை |
|---|---|---|
| சுவாமி விவேகானந்தர் ரா. கணபதி | (அச்சில்) | |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 2 | 00 |
| சுவாமி விவேகானந்தரின் சம்பாஷணைகள் | 6 | 00 |
| ,, ,, காலிகோ | 7 | 00 |
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| கர்மயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் | 1 | 50 |
| இராஜயோக உரைகள் | 2 | 50 |
| அருளுரை | 1 | 75 |
| நமது தாய் நாடு | 1 | 50 |
| கல்வி | 2 | 50 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 85 |
| எனது போர்முறை | 0 | 75 |
| எனது குருநாதர் | 1 | 25 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 | 50 |

### IV. இதர நூல்கள் :

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | 3 | 00 |
| இந்துமத ஸாரம் | 3 | 00 |
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| நாரதர் கலகம் | 4 | 75 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| ப்ரச்னோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| ,, ,, காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| ஆத்ம நிவேதனம் | 2 | 00 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |

### V. முரசு நூல்கள் : (பாக்கட் சைஸ்)

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |
| புத்தரின் அறமுரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |



## ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை - 4.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்

தொகுதி 59 | சித்தார்த்தி ஞு சித்திரை மீ | இதழ் 4




आपदामपहर्तारं दातारं सर्वसम्पदाम् ।
लोकाभिरामं श्रीरामं भूयो भूयो नमाम्यहम् ॥

ஆபதாமபஹர்த்தாரம் தாதாரம் ஸர்வஸம்பதாம் ।
லோகாபிராமம் ஸ்ரீராமம் பூயோ பூயோ நமாம்யஹம் ॥

—ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்

ஆபத்தைப் போக்குபவனும், எல்லாச் செல்வத்தையும் அளிப்பவனும், உலகிற்குக் களிப்பூட்டுபவனும் ஆகிய ஸ்ரீராமனை மீண்டும் மீண்டும் நான் வணங்குகிறேன்.

அன்றிவ்வுலகம் அளந்தாய்! அடி போற்றி!
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி!
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய்!

—ஆண்டாள்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

## ஞாயிறு, மார்ச் 11, 1883

மாலையில் ஐந்தரை அல்லது ஆறு மணி இருக்கும். ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையின் தென்கிழக்குத் தாழ்வாரத்தில் பக்தர்களோடு அமர்ந்திருந்தார். பக்தர்களை அவர் பார்த்துக்கொண்டிருந்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (கேதார் முதலிய பக்தர்களிடம்) : உலக வாழ்க்கையைத் துறந்துவிட்ட ஒரு சாது பகவானின் நாமஜபத்தில் ஈடுபட்டிருக்கத்தானே செய்வார்? அது அவருக்கு இயல்புதானே? அதைத் தவிர அவருக்கு வேறு வேலை என்ன இருக்கிறது? அவர் பகவானைத் தியானம் பண்ணினால், அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அதற்கு மாறாக அவர் பகவானைத் தியானிக்காமலோ, அவரது தூய நாமத்தைப் பாடாமலோ இருந்தால் மக்கள் அவரைப்பற்றிக் கேவலமாக நினைப்பார்கள்.

ஆனால் இல்லறத்தான் (கிருகஸ்தன்) ஒருவன் ஈசனது நாமத்தை ஸ்மரணம் செய்தால், அது பாராட்டத்தக்க விஷயமாகும். ஜனக மன்னரைப் பாருங்கள். உண்மையாகவே அவரிடம் எவ்வளவு துணிவு இருந்தது! ஞானம் என்னும் வாள் ஒன்று. கர்மம் என்னும் வாள் மற்றொன்று — இந்த இரண்டு வாள்களையும் அவர் சுழற்றிக்கொண்டிருந்தார். ஒரு புறம் அவரிடம் பிரம்மஞானம் பரிபூரணமாக நிறைந்திருந்தது. மற்றொரு புறம் உலகக் கடமைகளைச் செய்வதில் அவர் ஈடுபட்டிருந்தார். கற்பை இழந்த ஒரு பெண் வீட்டுவேலைகள் எல்லாவற்றையும் நுணுக்கமாகக் கவனித்து நன்றாகவே செய்கிறாள். ஆனால் அவளுடைய மனம் சதாகாலமும் அவளுடைய ஆசைநாயகனையே நினைத்துக்கொண்டிருக்கிறது.

சாது சங்கம் (நல்லாரோடு சேர்ந்திருத்தல்) எப்போதும் அவசியம். சாது ஒருவர் நம்மை இறைவனிடம் அறிமுகப்படுத்தி வைக்கிறார்.

**கேதார் :** ஆமாம், மகாபுருஷர்கள் உலக மக்களைக் கடைத்தேற்றுவதற்காகவே அவதரிக்கின்றனர். அது, ரெயில் எஞ்சின் தனக்குப் பின்னால் இணைக்கப்பட்டுள்ள பல பெட்டிகளை இழுத்துச் செல்வதைப் போன்றது. அல்லது ஆறோ குளமோ பலருடைய தாகத்தைத் தீர்த்து வைப்பது போன்றது.

அதிக நேரம் ஆகிவிட்டது. பக்தர்கள் தம் தம் வீடுகளுக்குத் திரும்பத் தயாரானார்கள். அவர்கள் அனைவரும் ஒருவர்பின் ஒருவராக ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து தரையில் வீழ்ந்து வணங்கி அவருடைய பாததூளியை ஏற்றனர். குருதேவர் பக்தரிடம், ''நீ இன்று இங்கிருந்து சென்றுவிடாதே. உன்னைப் பார்த்த மாத்திரத்திலேயே என்னுடைய ஆன்மிக உணர்வு கிளர்ந்தெழுகிறது' என்று சொன்னார்.

பவநாத்திற்கு இன்னும் திருமணம் ஆகவில்லை வயது பத்தொன்பது இருபது இருக்கும். பொன்னிறம் வாய்ந்தவர். அழகான உடல் படைத்தவர். பகவானது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகும். குருதேவர் அவரைச் சாட்சாத் நாராயணரது வடிவமாகவே கருதி வந்தார்.

## ஞாயிறு, ஏப்ரல் 8, 1883

மணிலால் மல்லிக் காசிக்குச் சென்று திரும்பியிருந்தார். அவர் ஒரு வியாபாரி. காசியில் அவருக்கு ஒரு பங்களா சொந்தமாயிருந்தது.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஏனய்யா, காசிக்குப் போயிருந்தாயே! அங்கே மகான் யாரையாவது பார்த்தாயா?

**மணிலால் :** ஆம் ஐயா. த்ரைலிங்க சுவாமி, பாஸ்கரானந்தர் முதலியவர்களை எல்லாம் பார்க்கச் சென்றிருந்தேன்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று நீ பார்த்தாய் ?

**மணிலால் :** த்ரைலிங்க சுவாமி அதே கோவிலில்தான் தங்கிருக்கிறார் அதாவது மணிகர்ணிகா கட்டத்தில், வேணிமாதவருடைய கோயிலுக்கு அருகில் இருக்கிறார். முன்பெல்லாம் அவர் இன்னும் உயர்ந்த ஆத்மானுபவ நிலையில் இருந்தார் என்று மக்கள் சொல்கிறார்கள். அப்போது பல அற்புதச் செயல்களைச் செய்யக்கூடிய திறமை அவருக்கு இருந்ததாம். இப்போது அந்தச் சக்தி எல்லாம் மிகவும் குறைந்துவிட்டதாம்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** இதெல்லாம் உலகப் பற்றுள்ள மக்கள் பேசக்கூடிய பழக்கமான பேச்சு.

**மணிலால் :** பாஸ்கரானந்தர் அனைவருடனும் கலந்து பழகுகிறார். அவர் த்ரைலிங்க சுவாமியைப் போல இல்லை. த்ரைலிங்கர் ஒரேயடியாக மௌனம் அனுஷ்டிக்கிறார். கண்டிப்பாக அவர் யாரோடும் பேசுவதில்லை.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** பாஸ்கரானந்தரோடு நீ ஏதாவது பேசினாயா?

**மணிலால் :** ஆம், நாங்கள் நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்தோம். பேச்சின் இடையில் பாவ புண்ணியம் பற்றியும் பேச்சு எழுந்தது. அவர் என்னிடம், ''பாவ வழியில் செல்லாதே. பாவ நினைவுகளையே விட்டொழி. அவ்விதம் நடந்து கொள்ள வேண்டும் என்றுதான் இறைவன் எதிர்பார்க்கிறார். புண்ணியம் தரக்கூடிய செயல்களிலேயே ஈடுபட வேண்டும்'' என்று சொன்னார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** ஆம், அப்படியும் ஒரு பாதை இருக்கிறது. அது உலகப் பற்றில் மூழ்கியுள்ள மக்களுக்கு ஏற்றது. ஆனால் மெய்ஞ்ஞானம் பெற்றவர்களோ-அதாவது 'இறைவன் அதாவது உண்மை, மற்றவை யாவும் பொய்' என்பதை உணர்ந்தவர்களே—வேறொரு மனநிலையைக் கொண்டிருக்கிறார்கள். 'ஈசுவரன் ஒருவரே கர்த்தா, மற்றவர்கள் அனைவரும் அகர்த்தாக்கள்' அதாவது 'அவருடைய கருவிகள் மட்டுமே ஆவர்' என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள்.

மெய்ஞ்ஞானம் பெற்றவர்கள் ஒருபோதும் தவறாக ஓர் அடியும் எடுத்து வைக்கமாட்டார்கள். பாவ புண்ணியத்தைப்பற்றி எல்லாம் புத்தியால் ஆராய்ந்து பார்த்து, பாவச் செயலை விலக்க வேண்டிய அவசியமே அவர்களுக்கு ஏற்படுவதில்லை. இறைவனிடம் அவர்களுக்கு அவ்வளவு பக்தி நிறைந்திருப்பது காரணமாக அவர்கள் எந்தச் செயலைச் செய்தாலும் அது நல்ல செயலாகவே அமைந்து விடும்.

'செயலுக்கு நான் கர்த்தா அல்ல. நான் ஈசுவரனின் தாசன், இயந்திரம். ஆண்டவனே அதை இயக்குபவன். ஆண்டவன் என்னை எவ்விதம் செயலில் ஈடுபடுத்துகிறானோ அவ்விதமே நான் செய்கிறேன். அவன் எப்படிப் பேசவைக்கிறானோ அப்படியே நான் பேசுகிறேன். அவன் எந்த வழியில் தூண்டுகிறானோ அவ்விதமே நான் இயங்குகிறேன்.' என்பதை அவர்கள் தெளிவாகவே அறிந்திருக்கின்றனர்.

முழு ஞானம் பெற்றவர்கள் புண்ணிய பாவங்களைக் கடந்தவர்கள். கடவுளே எல்லாச் செயல்களையும் செய்கிறார் என்பதை அவர்கள் தெளிவாகவே பார்க்கிறார்கள்.

முழு ஞானம் பெற்றவர்கள் புண்ணிய பாவங்களைக் கடந்தவர்கள். கடவுளே எல்லாச் செயல்களையும் செய்கிறார் என்பதை அவர்கள் தெளிவாகவே பார்க்கிறார்கள்.

ஓரிடத்தில் ஒரு மடம் இருந்தது. அங்கே வாழ்ந்த துறவிகள் நாள்தோறும் மதுகரி* பிக்ஷைக்காக வெளியே செல்வார்கள். ஒரு நாள் ஒரு துறவி பிக்ஷை வாங்கிக்கொண்டிருந்தபோது ஒரு ஜமீன்தார் ஒரு மனிதனை இரக்கமின்றி அடித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தார். அந்தத் துறவி மிகவும் கருணை வாய்ந்தவர். அவர் இடையில் குறுக்கிட்டு ஜமீன்தாரிடம் அடிப்பதை நிறுத்தும்படி கேட்டுக்கொண்டார். ஆனால் அப்போது ஜமீன்தாருக்குக்

---

* தேனீ பல மலர்களிலிருந்து தேனைத் திரட்டுவதைப் போலச் சாதுக்கள் ஒவ்வொரு கவளமாகப் பல வீடுகளிலிருந்து பிச்சையேற்பது 'மதுகரி பிக்ஷை' எனப்படும்.

கோபம் பொங்கிக்கொண்டிருந்தது. ஆகவே அவர் அந்தக் கோபத்தைக் குற்றமில்லாத அந்தத் துறவியின் மீதே காட்டிவிட்டார். துறவி சுய நினைவை இழந்து தரையில் விழும்வரை ஜமீன்தார் அவரை அடித்தார். இதைப் பார்த்த யாரோ ஒருவர் நடந்த செய்தியை மடத்திற்குச் சென்று தெரிவித்தார். தங்களைச் சேர்ந்த ஒரு துறவி ஜமீன்தாரால் நன்றாக அடிக்கப்பட்டு மெய்ம்மறந்து விழுந்து கிடக்கிறார் என்ற விவரம் தெரியவந்ததும் மடத்துத் துறவிகள் ஓடோடி வந்தனர்; அங்கே அடிபட்டு, சாது மூர்ச்சையுற்று விழுந்து கிடப்பதைக் கண்டனர்! உடனே நாலைந்து துறவியர் துறவியை மடத்திற்குத் தூக்கிக் கொண்டுபோய், ஒரு படுக்கையில் படுக்கச் செய்தனர். அவருக்கு அப்போதும் மூர்ச்சை தெளியாமலே இருந்தது. மற்றத் துறவிகள் அவரைச் சுற்றிலும் வருத்தத்துடன் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு சிலர் அடிபட்ட சாதுவுக்கு விசிறியால் விசிறிக் கொண்டிருந்தனர். "வாயில் கொஞ்சம் பால் ஊற்றிப் பார்க்கலாம்" என்று அவர்களுள் ஒருவர் சொன்னார். அவ்விதமே அவருடைய வாயில் பாலை ஊற்றியதும் சாதுவுக்கு மெல்ல மெல்ல மூர்ச்சை தெளிந்தது. சுய நினைவு திரும்பியது. அவர் தமது கண்களைத் திறந்து பார்த்தார். "இவருக்குச் சுயநினைவு வந்துவிட்டதா? மக்களை அடையாளம் கண்டுகொள்ள முடிகிறதா என்று பாருங்கள்!' என்று துறவிகளில் ஒருவர் யோசனை சொன்னார். அதன்படி அவர் சாதுவிடம், "மகராஜ், இப்போது தங்களுக்கு யார் பாலை ஊற்றுகிறார்கள் என்பது தெரிகிறதா?" என்று வினவினார். அதற்கு அந்தச் சாது மெல்லிய குரலில் "சகோதரரே! யார் என்னை அடித்தாரோ அவரேதான் இப்போது பால் ஊற்றுகிறார்" என்று பதில் அளித்தார்.

ஆனால் பகவானின் தரிசனம் பெறாமல் இத்தகைய மனநிலையை எவனும் அடைவதில்லை.

**மணிலால்:** ஆம் தாங்கள், இப்போது கூறியது மிக மிக உயர்ந்த ஆன்மிக நிலையைக் காட்டுகிறது. இதுபோன்ற விஷயங்களைப்பற்றி எல்லாம் பாஸ்கரானந்தருடன் பேசினேன்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** அவர் ஏதாவது வீட்டில் தங்குகிறாரா?

**மணிலால்:** ஆம், யாரோ ஒரு பக்தரின் வீட்டில் அவர் தங்கியிருக்கிறார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** அவருக்கு வயது என்ன ஆகிறது?

**மணிலால்:** சுமார் ஐம்பத்தைந்து வயது இருக்கும்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** வேறு எதைப்பற்றியாகிலும் அவரிடம் பேசினாயா?

**மணிலால்:** "எப்படிப் பக்தியைப் பெறுவது?" என்றுதான் கேட்டேன். அதற்கு அவர் "நாம ஜபம் செய். ராம் ராம் என்று உச்சரி' என்று சொன்னார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** இது மிகவும் நல்ல ஒரு போதனை.

---

## சகோதரி நிவேதிதை



1898ஆம் ஆண்டில் சுவாமி விவேகானந்தரைக் காஷ்மீரில் ஸ்ரீநகரில் சந்தித்தேன். அப்போது அவர் தம் அமெரிக்கச் சீடரான சகோதரி நிவேதிதாவைப் பற்றிய நிகழ்ச்சி ஒன்றைக் கூறினார்.

அப்பொழுதுதான் காஷ்மீரில் பனிக்குன்றில் அமைந்துள்ள அமர்நாத் ஆலயத்திற்குச் சென்று திரும்பி வந்தனர். விவேகானந்தர் மற்ற யாத்திரிகர்களுடன் நடந்து சென்றார். சகோதரி நிவேதிதா ஒரு தண்டியில் (பல்லக்கில்) சென்றார். சிறிது தூரம் சென்றதும், யாத்திரிகர்களிடையே மிகவும் வயதான கிழவி ஒருத்தி கையில் தடியுடன் தள்ளாடித் தள்ளாடி, மூச்சுத்திணற பரிதாபமாய் நடந்து வந்ததைப் பார்த்தார். உடனே சகோதரி நிவேதிதா தாம் இறங்கி, அத்தக் கிழவியைத் தண்டியில் உட்கார வைத்தார். அங்கிருந்து அமர்நாத் ஆலயம் செல்லும்போதும், திரும்பி வரும்போதும் சகோதரி நிவேதிதா, நடந்தே வந்தார்.

—நகேந்திரநாத் குப்தா

Reflections and Reministcences (1922)




## ஸ்ரீராமபிரான்

### சீதையின் உள்ளம்

ஒரு நாள் இரவை இராமர், சீதை, இலட்சுமணன் ஆகிய மூவரும் சுதீட்சணரின் ஆசிரமத்தில் கழித்தனர். மறுநாள் புறப்படும் சமயத்தில் சீதை உள்ளே சென்று வில், அம்பறுத்தூணி முதலியவற்றை எடுத்து வந்து கொடுத்தாள். அவற்றை எடுத்து வரும்போதே சீதையின் உள்ளத்தில் ஒரு சந்தேகம் தோன்றியது. மிகுந்த யோசனையுடன் அவள் நடந்து வந்தாள்.

இராமர் முனிவர்களைக் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்ததைக் கேட்டது முதல் அவள் மனதில் ஒரே குழப்பம். இராமர், சீதை, இலட்சுமணன் ஆகியோராகிய தங்களுக்கு அரக்கர் ஒருபோதும் எந்தத் தீமையும் செய்தது கிடையாதே! அப்படி இருக்கும்போது முனிவர்களுக்காக அரக்கர்களைக் கொல்வது சரியாகுமா?—என்பதுதான் சீதையின் உள்ளத்தில் எழுந்த சந்தேகம்.

தன் சந்தேகத்தை ஸ்ரீராமபிரானிடமே பணிவுடன் அவள் தெரிவித்தாள்.

'பொய் சொல்லுதல், பிறன்மனை கவர்தல், அநியாய ஆக்கிரமிப்பு ஆகிய மூன்றும் சுயநலம் காரணமாக மனிதன் செய்யும் அடிப்படைத் தவறு ஆகும். பொய் சொல்வது என்பது முற்றிலும் தாங்கள் அறியாத ஒன்று. பிற பெண்களைக் கனவிலும் நினைக்காத உத்தம குணம் தங்களுடையது. மூன்றாவதாகக் குறிப்பிட்ட தவறு காரணமாகத் தங்களுக்குப் பழி வந்துவிடுமோ என்று அஞ்சுகிறேன்.

''தங்களிடம் போருக்கு வராத அரக்கர்களைக் கொல்வதன் மூலம், அவர்களை விரட்டி ஆக்கிரமித்தல் என்னும் குற்றத்திற்குத் தாங்கள் ஆளாகிவிடுவீர்களோ என்று அஞ்சுகிறேன். தாங்கள் அந்தத் தவறு செய்யப்போகிறீர்களா? ஏனென்றால், அரக்கர்களிடமிருந்து முனிவர்களைக் காப்பாற்றுவதாகத் தாங்கள் உறுதிமொழி கூறியிருக்கிறீர்கள்.

''அரசகுமாரர்களாகிய நீங்கள் அனைவரையுமே காப்பாற்ற வேண்டும் அல்லவா? அப்படியிருக்க நம் வம்புக்கு வராத இந்த அரக்கர்களைக் கொன்று சாதுக்களை ரட்சிப்பதாகக் கூறியிருக்கிறீர்களே! நாமோ பிராயச்சித்தம் செய்வதற்காக மரவுரி தரித்து, தவசிகள் போல் வாழ இந்தக் கானகத்திற்கு வந்திருக்கிறோம். ஆனால் நீங்கள் போர்க் கோலம் பூண்டு தயாராக இருக்கிறீர்கள். கொலை செய்வது இந்த இடத்திற்கு ஏற்றதல்லவே!

''நாதா, உங்கள் மீது எனக்கு உள்ள அன்பு காரணமாகவே இதை நான் தங்களுக்கு நினைவுபடுத்தினேனே தவிர, அறிவுரை கூறுவதற்காக அல்ல. நானோ மிகவும் பணிவுள்ள ஒரு சாதாரணப் பெண். உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. நீங்கள் இருவரும் கலந்து ஆலோசித்து எது நல்லது என்று படுகிறதோ அதன்படியே செய்யுங்கள்'' என்று, பண்பின் பெட்டகமாகிய சீதை பணிவுடன் சொல்லி முடித்தாள்.

அதற்கு இராமர், ''தேவி, க்ஷத்திரியர்களாகிய நாங்கள் எங்கே எந்த இடத்தில் இருந்தாலும் கொடியவர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கிறோம் அதுவே அரசதர்மமாகும். ஆகவே அரக்கர்களைத் தண்டிப்பதில் ஆக்கிரமித்தல் என்ற குற்றத்திற்கே இடமில்லை. மேலும், மிகவும் நல்லவர்களாகிய இந்த முனிவர்களும் என்னையே நம்பி இப்போது பயமின்றி வாழ்கிறார்கள். அவர்

களுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்று வதற்காக, தேவையானல் உன்னையும், ஏன், தம்பி லட்சுமணனையும்கூடக் கொடுப்பதற்கு நான் தயங்க மாட்டேன். மட்டற்ற அன்பினால் நீ சொன்ன வார்த்தைகளைக் கேட்டு நான் பெரிதும் மகிழ்கிறேன். உன்னுடைய உயர்ந்த பண்புமிக்க பேச்சு, நாம் பிறந்த இரண்டு குலத்தவர்களுக்கும் உயர்வையும் பெருமையையும் தருவதாக அமைந்திருக்கிறது. நீயே என் இலட்சியத்திற்கு ஏற்ற உற்ற துணைவி ஆவாய். என் உயிரினும் மேலாக உன்னை நான் மிகவும் நேசிக்கிறேன்'' என்று உவகையுடன் கூறினார்.

இராமரின் விளக்கம் சீதைக்குப் பரம திருப்தி யைத் தந்தது. அவள் மனதிலிருந்த சந்தேகமும் அறவே நீங்கியது.

**அனுமான் அளித்த வாக்குறுதி :**

**இராமபிரான் இலங்கைக்குச் சென்று இராவணனை வென்று சீதையை மீட்டு வரத் தீர்மானித்தார். அப்போது நடந்த வரலாறு இது:—**

அணை கட்ட வேண்டும் என்று முடிவெடுத்த வுடன் ஸ்ரீராமபிரான் எல்லா வானரர்களையும் அழைத்தார். அவர்களைப் பார்த்து, ''வானரர் களே! நீங்கள் அனைவரும் சென்று மலைகளிலிருந்து பாறைகளை எடுத்துக்கொண்டு ஓடி வாருங்கள். அந்தப் பாறையை வைத்து அணையைக் கட்டிவிட லாம்'' என்று கூறினார்.

இராமர் கட்டளையிட்டவுடனே வானரர்கள் பல திசைகளிலுமுள்ள மலைகளை நோக்கிச் சென்றனர். உயர்ந்த மலைகளிலிருந்து நல்ல அகலமான பெரிய பெரிய பாறைகளாகப் பெயர்த்து எடுத்துக்கொண்டு ஓடிவரத் தொடங்கினர். நலனும் நிலனும்தான் பாலம் கட்டும் பொறியாளர்கள். எனவே பாறைகள் வர ஆரம்பித்தவுடனே நளனும் நீலனும் வேலை யைத் துவக்கிவிட்டார்கள்.

அனுமன் வானரவீரர்களிலேயே மிகவும் பல சாலி அல்லவா? அவரும் தமது பங்கிற்குப் பாறையை எடுத்து வருவதற்காகக் கோவர்த்தன மலைக்குச் சென்றார். அந்த மலையையே வேருடன் பறிக்க முயற்சி செய்தார். ஆனல் என்ன ஆச்சரியம்! அவரால் அதை ஒருசிறிதும் அசைக்க முடிய வில்லை. அனுமனின் இயலாமையைக் கண்ட மலை யரசன் அவரைப் பார்த்து, ''ஆஞ்சனேயா! தாங்கள் எனக்கு இராமபிரானின் தரிசனம் கிடைக்கச் செய்கிறேன் என்று வாக்களிப்பீர்க ளானல், நான் உங்களுடன் வரத் தயாராக இருக் கிறேன்'' என்று கூறினன்.

மலையரசனின் வேண்டுகோளைக் கேட்ட அனு மன் அவனிடம், ''மலையரசே! தாங்கள் என்னுடன் வருவீர்களேயானல் நிச்சயமாகத் தங்களுக்கு இராமபிரானின் தரிசனம் கிடைக்கும்படி செய் வேன்'' என்று வாக்களித்தார்.

அனுமன் சொன்னதைக் கேட்டு மலையரசன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். அவன் தானகவே அனுமனின் மலர்க் கைகளின்மீது வந்து அமர்ந்து கொண்டான்.

அனுமனும் மிக்க மகிழ்ச்சியுடன் அணைகட்டும் வேலை நடக்கும் இடத்தை நோக்கிக் கிளம்பினர். ஆனல் அவர் விரஜபூமிக்கு மேலாக வந்துகொண் டிருந்தபோதே அணை கட்டும் வேலை முடிந்திருந் தது.

பகவான் ஸ்ரீராமரும் வானரர்களைப் பார்த்து, ''வானரவீரர்களே! அணைகட்டும் வேலை முடிந்து விட்டது. இனி நீங்கள் மேலும் கற்பாறைகளைக் கொண்டுவர வேண்டிய அவசியம் இல்லை. யார் யார் எங்கு இருக்கிறீர்களோ அந்த அந்த இடத்தி லேயே பாறைகளைப் போட்டுவிட்டு வந்துவிடுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

இராமபிரானின் உத்தரவுப்படியே வானரர்கள் தாம் இருந்த இடத்திலேயே பாறைகளை விட்டுத் திரும்பத் தொடங்கினர். அனுமனும் வேறு வழி யின்றி, கோவர்த்தன மலையை விரஜபூமியில் வைக்கும்படி நேரிட்டது.

கீழே வைக்கப்பட்ட கோவர்த்தன மலை அனு மனைப் பார்த்து, ''ஆஞ்சனேயா! தாங்கள் எனக்கு இராமபிரானைக் காட்டுவதாக வாக்குறுதி கொடுத் தீர்கள். ஆனல், இப்போது என்னை இந்த இடத்தி லேயே விட்டுச் செல்கிறீர்களே, இது நியாய மாகுமா? நீங்களே சொல்லுங்கள், நான் இப்போது உள்ள இந்த நிலையில் ஏழைகளின் ஆதரவாள ளுகிய ஸ்ரீராமபிரானை எப்படித் தரிசிக்க முடியும்?'' என்று கேட்டது.

அனுமன் என்ன பதில் சொல்ல முடியும்? பாவம், ஆஞ்சனேயரின் பாடு படுதிண்டாட்டமாகிவிட்டது. இராமரின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்துதானே ஆக வேண்டும்? பிறகு வாக்குறுதி என்ன ஆவது? வருத்தமடைந்த அனுமன் மலையைப் பார்த்து,

'மலையரசே! வருந்த வேண்டாம். நான் ஸ்ரீராமரிடம் சென்று முறையிடுகிறேன். கருணைக் கடலான இராமசந்திரமூர்த்தி கண்டிப்பாக உங்களை எடுத்து வரும்படி. கூறுவார். அப்போது தாங்கள் அவரைத் தரிசிக்கலாம்'' என்று ஆறுதலாகச் சொல்லிவிட்டு வேகவேகமாகச் சென்றார்.

இராமபிரானின் இருப்பிடத்தை ஆஞ்சனேயர் அடைந்தார். அண்ணலை வணங்கிவிட்டுத் தமக்கு நேர்ந்த இக்கட்டைத் தெரிவித்துக்கொண்டார்.

அனுமன் கோவர்த்தன மலைக்கு அளித்த வாக் குறுதியைக் கேட்ட இராமர், ''ஆஞ்சனேயா! வருந் தாதே! இப்போதே நீ கோவர்த்தன மலை இருக்கும் இடத்திற்குச் செல். அவரிடம் நான் துவாபர யுகத்தில் ஸ்ரீகிருஷ்ணனாக வந்து அவருக்குத் தரி சனம் அளிப்பேன்; தற்போது வருந்த வேண்டாம் என்று தெரிவித்துவிட்டு வா'' என்று கூறினார். அனு மனும் அவ்விதமே செய்தார்.

துவாபர யுகம் வந்தது. பகவான் இராமர் ஸ்ரீகிருஷ்ணனாக விரஜபூமியில் அவதரித்தார்.

ஒரு சமயம் தேவர்களின் அரசனான தேவேந் திரன் விரஜவாசிகள் தன்னைப் பூஜிக்காமல் அவ மானம் செய்ததற்காக வெகுண்டான். ஆகவே அவன் விரஜவாசிகளைப் பூண்டோடு அழிப்பதற் காக ஊழிக்காலம் போன்று கடுமையாக மழை பெய்ய வேண்டும் என்று மேகங்களுக்கு ஆணையிட் டான். உடனே விரஜபூமியில் பேய்மழை கொட்டத் தொடங்கியது.

எங்கும் ஒரே வெள்ளக்காடு. மக்கள் ஓலமிட்டுக் கொண்டு நந்தனின் வீட்டை நோக்கி ஓடத் தொடங்கினர்.

இந்திரனின் கோபத்தைக் கண்டு மக்கள் மிகவும் பயந்துவிட்டனர்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணன் மக்களின் அவல நிலை யைப் பார்த்து வருந்தி அவர்களிடம், ''விரஜவாசி களே! பயப்படாதீர்கள். தைரியமுடன் இருங்கள். இந்திரனின் கோபம் உங்களை ஒன்றும் செய்துவிட முடியாது; வாருங்கள்'' என்று சொல்லி, அனைவரை யும் அழைத்துக்கொண்டு கோவர்த்தன மலை இருக்கும் இடத்திற்குச் சென்றார். கோவர்த்தன மலைக்குத் தரிசனம் தந்தார். பிறகு மலையைத் தமது சுண்டுவிரலால் தாங்கிக்கொண்டார். கோப கோபியரின் பயத்தைப் போக்கினார்.

இவ்விதம் பகவான் தமது வாக்கையும் தமது பக்தரான ஆஞ்சனேயரின் வாக்குறுதியையும் நிறை வேற்றி வைத்தார். *

---



ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமத்திற்கு ஆதிசங்கரர் பாஷ்யம் இயற்ற நினைத்தார். ஆகவே அவர் தமது சீடரிடம் ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமச் சுவடியை உள்ளேயிருந்து எடுத்து வரும்படி பணித்தார்.

உள்ளே சென்ற சீடர் விஷ்ணு சஹஸ்ரநாமச் சுவடியைக் கொண்டு வந்தார். சீடரின் தவற்றைச் சங்கரர் சுட்டிக் காட்டினார். சீடர் உள்ளே சென்று மீண்டும் விஷ்ணு சஹஸ்ரநாமச் சுவடியையே எடுத்து வந்தார். சங்கரர் சீடரைக் கடிந்து கொண்டு ''லலிதா சஹஸ்ரநாமச் சுவடியையே எடுத்து வரவேண்டும்'' என்று மீண்டும் பணிந்தார். சீடர் மூன்றாவது முறையாகவும் விஷ்ணு சஹஸ்ரநாமச் சுவடியையே எடுத்து வந்தார்.

''திரும்பத்திரும்ப ஏன் இப்படிச் செய்கிறாய்?'' என்று சங்கரர் கேட்க்வே, உள்ளே இருக்கும் அழகிய கன்னிகை மூன்று முறையும் வற்புறுத்தி, விஷ்ணு சஹஸ்ரநாமச் சுவடியையே தம்மிடம் கொடுத்ததாகச் சீடர் கூறினார்.

அதைக்கேட்ட சங்கரர் வியப்புடன் உள்ளே சென்று பார்த்தபோது, பராசக்தி யான ஸ்ரீ லலிதாம்பிகையே அங்கு நேரில் பிரசன்னமாகி இருப்பதைக் கண்டார். பரவசத்துடன் தேவியின் திருவடிகளில் விழ்ந்து பணிந்தார்.

அம்பிகை சங்கரரிடம், ''விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு நீ பாஷ்யம் இயற்றுவது தான் பக்தர்களுக்கெல்லாம் உதவியாக இருக்கும்; எனக்கும் திருப்தியைக் கொடுக்கும்'' என்றாள். இவ்விதம் அம்பிகை கட்டளையிட்டதன் பேரில் சங்கரர் விஷ்ணு சஹஸ்ர நாமத்திற்குப் பாஷ்யம் இயற்றினார் என்று சொல்லப்படுகிறது.

# கீதை காட்டும் சமயம்

—: சுவாமி தபஸ்யானந்தர் :—



பரந்த இந்தப் பிரபஞ்சத்தில் இயற்கையும் மனிதனும் பெற்றிருக்கிற இடம் பற்றிய ஓர் இந்துவின் மிக உயர்ந்த அனுபவத்தைக் கீதை தன்னிடம் பெற்றுள்ளது. இந்து சமயத்தில் உள்ள எல்லா நூல்களிலும் இதுவே மிகுந்த புகழ் வாய்ந்ததும், ஆழமான சிந்தனை படைத்ததும் ஆகும். இந்து சமயத்தையும் தத்துவத்தையும் பற்றி முதன்முதலாகப் படிக்கத் துவங்கும் ஒருவர்கூட, மிக விரைவில் புரிந்துகொள்ளக்கூடியதாகவும் அவ்வளவு எளிமையாகவும் இது அமைந்துள்ளது.

அதே நேரத்தில் ஈடுஇணையற்ற தத்துவஞானிகளும் மகான்களுமான ஸ்ரீசங்கரர், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீமத்துவர், ஸ்ரீமதுசூதனர் முதலியவர்கள் அறிவாழம் மிக்க உரைகள் வகுக்கும்படியான ஆழமும் கடினமும் கொண்டதாகவும் இது விளங்குகிறது. இன்றைய இந்தியாவின் மிகச் சிறந்த அரசியல் தலைவர்களும் அறிஞர்களுமான திலகர், மகாத்மா காந்தி, அரவிந்தர் முதலியவர்களும் தங்களுடைய சிறந்த நூல்களைக் கீதையின் விளக்கமாக எழுதியுள்ளனர்.

## அற்புதமான நூல்

அர்ஜுனன் மனத்தில், 'உற்றார் உறவினர்களைக் கொன்றே ஆகவேண்டும்' என்ற கடமைக்கும், 'முடிவே இல்லாத கடுமையான போரைக் கடமைக்காகச் செய்யக் கூடாது' என்று எழுந்த மயக்கத்திற்கும் இடையே ஏற்பட்ட போராட்டத்தைத் தீர்க்கும் வகையில் கீதையின் உபதேசம் துவங்குகிறது. அர்ஜுனனது இந்த மனப் போராட்டத்தைத் தீர்க்கும் முயற்சியில் கீதையின் தெய்விக ஆசார்யரான கண்ணன் மனிதர்களின் மனக்குழப்பத்திற்கும் போராட்டத்திற்கும் காரணமான, ஆன்மாவைப் பற்றும், பல வகையான நோய்களைத் தீர்க்கும் பல வேறு தர்மங்களைக் கூறுகிறார். அந்தத் தருமங்களை மிக ஆழமான, நுட்பமான அடிப்படையிலிருந்து விளக்கி, நடைமுறையில் எப்படிக் கடைப்பிடித்து ஆன்மாவின் நோய்களைத் தீர்ப்பது என்பதையும் விளக்குகிறார். இதனால் கீதை பல வகையான தத்துவங்களின் பொழிவாகவும், தருமங்களின் சாரமாகவும், தான் தோன்றிய காலத்தில் கடவுளை அடையக் கடைப்பிடிக்கப்பட்ட பலவிதமான ஆன்மிகச் சாதனைகளை உள்ளடக்கிய அற்புதமான நூலாகவும் விளங்குகிறது.

## கீதை தரும் கடவுள்—உலகம் பற்றிய விளக்கம்

இந்த உலகம், உலகில் உள்ள உயிர்கள், உயிரில்லாத பொருள்கள், இவற்றின் தோற்றம், வாழ்வு, வளர்ச்சி முதலியவற்றை மனிதன் புரிந்துகொண்டால்தான் அவன் தனக்கு நேரும் மனக் குழப்பத்திலும் மயக்கத்திலுமிருந்து விடுபட முடியும். எனவே கீதை இதைப்பற்றித் தெளிவாகக் கூறுகிறது.

உலகத்தின் தோற்றத்தையும் வாழ்வையும் முடிவையும் கீதை சிறிதும் சந்தேகம் ஏற்படாத மொழியில் பரம்பொருளோடு இணைத்துக் கூறுகிறது. ஆனால் இந்த இணைப்புக் கொள்கை, 'உலகமும் தெய்வமும் ஒன்றுக்கொன்று சமமானது' என்று கூறும் சமன்படுத்தும் கொள்கை அல்ல.

உலகைவிடக் கடவுள் உயர்வானவர், மிகச் சிறப்பானவர் என்ற கொள்கையே கீதையில் கூறப்படுகிறது. அதே நேரத்தில், கடவுள் இருப்பிற்கும் உலகச் செயற்பாட்டிற்கும் இடையில் எந்தவிதமான அடிப்படை வேற்றுமையும் அமையாமல் 'வெளிப்படுத்துதல்' என்ற கொள்கையின் மூலம் இரண்டிற்கும் அமைந்த தொடர்பு சிறப்பாக உணர்த்தப்படுகிறது.

இந்தக் கொள்கையின்படி பரம்பொருளான கடவுள் தம்மிடமிருந்தே இந்த உலகத்தை வெளிப்படுத்துகிறார். இறுதியில் தம்மிடமே ஒடுக்கிக்கொள்கிறார். இந்த வெளிப்படுத்துதல், ஒடுக்குதல் என்னும் கொள்கை, பிரகிருதி என்னும் கொள்கையை மையமாகக் கொண்டு அமைந்துள்ளது.

## பிரகிருதி

பிரகிருதி என்பது கடவுளிடமிருந்து உலகத்தை வெளிப்படுத்தும் ஆற்றலாகவும், அதே நேரத்தில்,

வெளியாகும் அந்த உலகமாகவும் விளங்குகிறது. இந்தப் பிரகிருதி தத்துவம் கடவுள் இருப்பைப் பற்றிக் கூருத சாங்கியத் தத்துவத்தில் முதன்முதலில் உருவாக்கப்பட்டது. கீதையில் அது எடுத்துக் கொள்ளப்பட்டு அதனுடைய கடவுள் இருப்புக் கொள்கைக்கும் பக்தி உபதேசத்திற்கும் ஏற்ப மாற்றப்பட்டுள்ளது. சாங்கிய யோகத்தில் ஒன்றுக் கொன்று வேறுபட்டதாகவும் முரணுனதாகவும் கூறப்படும் பிரகிருதி, புருஷன் என்னும் இரண்டும் கீதையில் மாயை, சுபாவம் என்னும் பெயர்களோடு பரம்பொருளான பகவானின் இரண்டு வகையான வெளிப்பாடுகள் என்று கொள்ளப்பட்டு, அவற்றின் வேற்றுமைகளும் முரண்பாடுகளும் நீக்கப் பட்டுள்ளன.

கீதையின் இந்த இணைப்புக் கொள்கையின்படி புருஷன் என்பது பரம்பொருளின் உயர்ந்த சுபாவம். பிரகிருதி என்பது தாழ்ந்த சுபாவம். சாங்கியத்தில் கூறப்படும் பிரகிருதியே கீதையில் கீழான பிரகிருதி என்று அழைக்கப்பட்டு, சாங்கியத் தத்துவத்தில் கூறப்பட்டது போலவே, அதுவே உலகமாக அமைந்துள்ளது என்று கூறப்படுகிறது.

## பிரகிருதியின் அமைப்பு

இந்தப் பிரகிருதி ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாததும் உலக உயிர்கள் - பொருள்களின் அமைப்பிற்கும் நடத்தைக்கும் காரணங்களாகியது மான பொருள் என்ற வகையிலும் (Physical Substance) பண்புகள் என்ற வகையிலும் (Quality) அமைந்த சாத்துவிகம், ராஜசம், தாமசம் என்னும் மூன்று பொருள் (Substance), குணங்களால் (Quality) உருவாக்கப்பட்டுள்ளது.

## உடம்பின் இயக்கத்தில்

இந்த மூன்றில் உலக உயிர்களின் உடம்பு என்ற நிலையில் சாத்துவிகம் என்பது, எந்தச் சூழ்நிலையாலும், எந்தக் காரணங்களாலும் சிறிதும் பாதிக்கப்படாத, ஆடாத அசையாத ஆழ்ந்த அமைதியைக் குறிக்கிறது.

ராஜசம் என்பது, எப்போதும் ஆரவாரத்தோடும் அமர்க்களத்தோடும் ஓடி அலைந்துகொண்டே இருக்கும் பரபரப்பைக் குறிக்கிறது.

தாமசம் என்பது ஒன்றுமே செய்யாமல் ஒரே இடத்தில் உறங்கி, வீழ்ந்து கிடக்கும் சோம்பேறித் தனத்தைக் குறிக்கிறது.

## அறிவின் ஆட்சியில்

உடம்பின் இயக்கத்தை மட்டும் அல்லாமல் உலக உயிர்களின் அறிவையும் இந்த மூன்று குணங்களே ஆட்சி செய்கின்றன. சாத்துவிகம் அளப்பரிய ஞானங்களைத் தருவதற்குக் காரணமாக உள்ளது. ராஜசம் அடக்கமுடியாத பேராசைகளைத் தருகிறது. தாமசம் அறிவே இல்லாத, ஆற்றலே அமையாத, கீழ்த்தரமான மனநிலையைத் தருகிறது.

உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் உயிரல் லாத பொருள்களும் இந்த மூன்று பொருள்களாலும் குணங்களாலுமே அமைந்து இயங்குகின்றன.

## இவையே காரணம்

உலகில் தோன்றும் உயிருள்ள, உயிரில்லாத எல் லாப் பொருள்களுமே ஒரே மாதிரியான, ஒன்றுக் கொன்று வேற்றுமை கண்டுபிடிக்க முடியாத சாத்து விகம், ராஜசம், தாமசம் என்னும் இந்த மூன்று பொருள்களும் (Substance) குணங்களும் தங்களுக்குள் நடத்துகிற கலப்பாலும் தாக்குதல் களாலுமே தோன்றுகின்றன.

இந்தக் கலப்பு, தாக்குதல்களின் விளைவாக உல கிற்கும் உலக உயிர்களின் தோற்றத்துக்கும் அடிப் அடிப்படைப் பொருள்களான மண், நீர், தீ, காற்று, ஆகாயம், மனம், மனத்தின் உணரும் ஆற்றல், தான் என்ற உணர்வு ஆகிய எட்டும் தோன்றுகின்றன.

இந்த எட்டு அடிப்படைப் பொருள்களின் கலப் பாலும் இயக்கத்தாலும்தான் உலகில் ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு மனிதன் வரை அனைத்துக்குமான உடம்புகள் தோன்றுகின்றன; பிறகு அவற்றுள் உயி ரும் மனமும் தோற்றுவிக்கப்படுகின்றன. பிறகு மரணகாலத்தில் உடல்களை விட்டு உயிர் பிரியும் போது அந்த உடல்களும் உயிரும் மனமும் மறுபடி யும் இந்த எட்டு அடிப்படைப் பொருள்களிலேயே கரைந்து போகின்றன.

இவ்வாறு தோன்றுவதும் கரைவதுமாகிய இந்தக் காரியம் அழிவே இல்லாத ஒரு வட்டம் போல் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது.

## உலகமும் மனிதனும்

உலகத்தின் தோற்றமும் ஒழுக்கமுமாகிய இந்த நிகழ்ச்சி ஒவ்வொரு மனிதனின் அன்றாட வாழ்க்கை யிலும் அமைந்துள்ளது. மனிதன் விழித்துக்கொண் டிருக்கும்போது அவனுடைய தனிப்பட்ட உலகம் விழித்துக்கொண்டிருக்கிறது. இரவில் அவன் உறங் கும்போது அவனுடைய உலகம் அவன் மனதிற்குள்

ஒடுங்கிவிடுகிறது. மறுபடியும் அவன் விழிக்கும்பொழுது அவனுடைய உலகம் மறுபடியும் விழித்துச் செயற்படத் துவங்குகிறது.

### பிரம்மாவின் பகலும் இரவும்

இதுபோலவே உலக உயிர்களைப் படைக்கின்ற பிரம்மா பல ஆயிரம் ஆண்டுகள் நீடிக்கும் அவருடைய பகற்காலத்தில் விழித்துக்கொண்டிருக்கும்போது உலகத்தில் உள்ள உயிர்கள் பொதுவாக விழிப்புநிலையை அனுபவிக்கின்றன.

பகல் போலவே பல ஆயிரம் ஆண்டுகள் நீடிக்கும் அவருடைய இரவுக் காலத்தில் இந்த உயிர்கள் பிரம்மாவின் அடுத்த விழிப்புக் காலத்தில் தோன்றுவதற்காகப் பிரகிருதியில் ஒடுங்கிவிடுகின்றன.

இப்படி உயிர்கள் விழிப்பது ஒடுங்குவது என்னும் நிகழ்ச்சிகள் நீண்டகால இடைவெளிக்குப் பிறகு ஒவ்வொன்று அடுத்து அடுத்து எப்போதுமே முடிவு அடையாத ஒரு வட்டம் போல் தொடர்ந்து நடந்துகொண்டே இருக்கின்றன.

### இந்தப் பிரகிருதியும்...

ஆனால் கீதையின் கருத்துப்படி. உலகமும் உலகத்தில் உள்ள உயிர்களின் தோற்றத்துக்குக் காரணமான இந்தப் பிரகிருதியும் சுதந்திரமாகத் தானே செயற்படும் ஒரு பொருள் அல்ல; பரம்பொருளின் கட்டளையை நிறைவேற்றும் ஒரு வேலைக்காரன் மட்டுமே.

இந்தப் பிரகிருதியின் விளைவான எட்டு அடிப்படைப் பொருள்களால் தோன்றுகி~ இந்த உலகமும் உயிர்களும் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கும் நிலையைப் பெற்றுள்ளன.

### நிலையான ஆத்மா

இந்தப் பிரகிருதிக்கு முற்றிலும் எதிராக எதனாலும் எப்போதும், எந்தவித மாற்றமும் அடையாத, தனக்குத்தானே சுதந்திரமாகச் செயற்படும் மற்றோர் ஆற்றல் உள்ளது. இது பரம்பொருளான பகவானின் மேலான சுபாவம் அல்லது இயற்கை ஆகும். இது ஜீவாத்மா என்று அழைக்கப்படுகிறது.

கீதையில் கூறப்படும் இந்த ஜீவாத்மாக்கள் சாங்கியத்தில் கூறப்படும் புருஷர்கள் என்பதற்கு இணையானதாகும். சாங்கியத்தில் கூறப்படும் புருஷர்களின் எண்ணிக்கை கணக்கற்றது என்று கூறப்படுவது போலவே கீதையிலும் ஜீவாத்மாக்களின் எண்ணிக்கை கணக்கற்றதாகக் கூறப்படுகிறது.

ஆனால், கீதை சாங்கியத்திற்கு மாறாக, இந்த ஜீவாத்மாக்கள் முன்பு கூறப்பட்ட பிரகிருதியின் மூன்று குணங்களாலும், அவற்றின் விளைவான எட்டு அடிப்படைப் பொருள்களாலும் உண்டாக்கப்பட்டாலும், அது இவற்றுக்குக் கட்டுப்படாத, இவற்றுக்குத் தலைவராக விளங்கும் பரம்பொருளான பகவானின் அம்சங்கள் (பகுதிகள்) என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

[தொடரும்]

---



மனிதன் சாப்பிடுவதற்குப் பிறக்கவில்லை, வாழவுமில்லை. சரீரத்தில் நாம் வசிப்பதனால், அதைக் காப்பாற்றவே ஆகாரம் உட்கொள்ள வேண்டியிருக்கிறது.

—குரு பகவத்சிங்

மனிதன் குறையுடையவன் மட்டுமல்ல, குறை காண்பவனும் ஆவான். பிறர் குறையைக் காண்பவன் அரை மனிதன்; தன் குறையைக் காண்பவன் முழு மனிதன்.

—சாக்ரடிஸ்

ஒருவன் எதை விரும்புகிறானோ அதிலேயே அவன் ஆசை திரும்புகிறது. விரும்பிய பொருளை அடையும்போது, அதனின்றும் ஆசை திரும்புகிறது; ஆனால் ஆசை நீங்குவதில்லை.

—பஞ்சதந்திரம்

செல்வம் இல்லாத காலத்தும், செல்வம் உடையவர்களைப் போன்று மிக்க மகிழ்ச்சியுடன் தம்மால் முடிந்த அளவு ஏழைகளுக்குக் கொடுக்கும் நற்குணமுடையவர்களுக்கு மோட்சம் கிடைப்பது திண்ணம்.

—நாலடியார்




# செயலும் விளைவும்

முன்னொரு காலத்தில் உலகில் மக்கள் மிகவும் இன்பமாக வாழ்ந்து வந்தார்கள். எங்கும் செழிப்பு மிகுந்திருந்தது. மக்களின் மனதிலே மகிழ்ச்சி நிறைந்திருந்தது. உண்மையே பேசி நல்லதையே செய்பவர்களாக மக்கள் விளங்கினார்கள்.

அந்தக் காலத்தில் தவத்திலும் ஞானத்திலும் சிறந்த ஒரு முனிவர் இருந்தார். அவருடைய ஆசிரமத்தில் பல சிறந்த மாணவர்கள் மிக்க பயபக்தியுடன் கல்வி கேள்வி களில் தேர்ச்சி பெற்று வந்தனர். அவர்களோடு முனிவரின் வளர்ப்பு மகள் மாதவச் செல்வியும் அவளது தோழிகளும் பயின்று வந்தனர்.

ஒரு நாள் முனிவர் பல தேசங்களுக்கும் சென்று வரவேண்டும் என்ற தமது ஆவலை ஆசிரமத்தில் இருப்பவர்களிடம் தெரிவித்தார். தாம் புறப்படுவதற்கு உரிய ஒரு நாளையும் நிச்சயித்தார்.

முனிவர் புறப்படுவதற்கு முன்பு மாதவச்செல்வியை அழைத்து ஒரு பெட்டியைக் கொடுத்து, ''மகளே! எந்தக் காரணத்தைக் கொண்டும் நான் வரும் வரையில் இந்தப் பெட்டியைத் திறக்காதே. திறந்தால் உனக்கும் உன்னுடன் வசிப்பவர்களுக்கும் பல தீங்குகள் ஏற்படும்'' என்று கண்டிப்பான குரலில் கூறினார்.

மாதவச்செல்வி அழகாகத் தலையை அசைத்து, ''தந்தையே! நான் பத்திரமாகப் பாதுகாப்பேன். சென்று வாருங்கள்'' என்றாள்.

சிறிது காலம் எந்தவித மாற்றமும் இன்றிக் கழிந்தது. முனிவரின் மகளுக்கு அந்தப் பெட்டியின் வேலைப்பாடு மிகவும் பிடித்திருந்தது. அதைத் திறந்து பார்க்க வேண்டும் என்ற ஆவலும் அதிகரித்தது. பகல்நேரத்தில் சக மாணவ, மாணவிகள் முனிவரின் கண்டிப்பை நினைவுபடுத்திப் பெட்டியைத் திறக்க விடுவதே இல்லை. இது காரணமாக இரவில் அவளுக்குத் தூக்கங்கூட வருவதில்லை.

ஒரு நாள் காலைநேரம். ஆசிரமத்தில் அனைவரும் தம் தம் கடமைகளைக் கவனிக்கச் சென்றுவிட்டனர்.

தனித்து விடப்பட்ட முனிவரின் மகள் மனம் படபடக்க, பூட்டப்படாதிருந்த அந்தப் பெட்டியைத் திறந்தாள். அவ்வளவுதான்! அதிலிருந்து எண்ணற்ற பூச்சிகள்

வெளியே வந்து அவளைக் கொட்டத் தொடங்கின. அவளுடைய கூக்குரலைக் கேட்டு மற்றவர்களும் ஓடி வந்தார்கள். அவர்களையும் பூச்சிகள் கடிக்கத் தொடங்கின. ''என்ன காரியம் செய்தாய், பெண்ணே!'' என்று அனைவரும் கூக்குரலிட்டனர்.

அப்போது பெட்டிக்குள் மறுபடியும் ஏதோ சப்தம் செய்வது போலக் கேட்டது. உடனே மாதவச்செல்வி அதைத் திறக்கப் போனாள். ஆனால் அனைவரும் அவளைத் தடுத்தனர்.

மறுபடியும் சப்தம் கேட்கவே முனிவரின் மகளால் ஆவலைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அனைவரும் தடுத்தபோதும், ''தெய்வமே! நீதான் எனக்குத் துணை செய்ய வேண்டும்!'' என்று சொல்லிக்கொண்டே பிடிவாதத்துடன் பெட்டியைத் திறந்தாள். மறுவிநாடியே பெட்டியிலிருந்து தெய்வக் களையும் அன்பும் சாந்தியும் பொருந்திய தேவதை வெளிப்பட்டு அவளை அணைத்துக்கொண்டது. உடனே பூச்சிகளால் ஏற்பட்ட வேதனை மறைந்து மாதவச்செல்விக்குப் புத்துணர்ச்சி ஏற்பட்டது.

அதேபோல் தேவதை மற்றவர்களையும் அழைத்து, அவர்களின் நோயையும் போக்கியது. பிறகு அவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறியது: ''குழந்தைகளே! அந்தப் பெண்ணால் வெளியே கொண்டு வரப்பட்ட பூச்சிகள்தாம் இனிமுதற்கொண்டு உலகம் முழுவதிலும் கவலை, ஆசை, கோபம், தீங்கு, பகை, பூசல், நோய் போன்ற தீய செயல்களைப் பரப்பப்போகின்றன. நான்தான் 'கடவுள் நம்பிக்கை' என்னும் தேவதை. என் ஒருத்தியைப் பற்றிக்கொண்டுதான் இனி உலகில் அனைவரும் தத்தம் கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டு நல்வாழ்வு அடைவார்கள். மனிதன் ஆண்டவனை அடைவதில்தான் நிறைவான, முழுமையான மகிழ்ச்சி இருக்கிறது என்பதை என் மூலமாக மக்கள் தங்கள் நடைமுறை வாழ்க்கையில் உணர்வார்கள்.''

மக்கள், தமது மனதை அடக்காததாலும் தமது பிடிவாத குணத்தினாலும் தங்களுக்குத் தாங்களே துன்பம் வருவித்துக்கொள்கிறார்கள் அல்லவா? இந்தத் தொல்லைகளிலிருந்து விடுபடுவதற்குக் 'கடவுள் நம்பிக்கை' என்னும் தேவதையின் துணையை நாடுவதைத் தவிர வேறு வழியே இல்லை. *

---



விருப்பங்களைப் பூர்த்தி செய்தபின் எத்தனை நேரம் வேண்டுமானாலும் மனதை ஒரு நிலையில் நிறுத்தி வைக்க முடிகிறது.

—சுவாமி ராமதீர்த்தர்

கல்வியே மனிதனை உருவாக்குகிறது; முழுமனிதனைத் தகுதியுடையவன் ஆக்குகிறது. எழுத்தே உறுதி வாய்ந்த நெறியான மனிதனை உருவாக்குகிறது.

—பேக்கன்

உயிர்கள் இறப்பதில்லை, அழிவற்றவை. உலக வாழ்க்கை மனிதனுக்கு அமைந்த சிறையே. நம் உடலான சிறையிலிருந்து விடுபட முயல்வதே தத்துவஞானம்.

—பிளேட்டோ

# எந்த உருவம்?



வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

இறைவன் அருவமாய் இருப்பவன்; இயல்பாகவே குறியும் குணமும் இல்லாதவன்; மனதுக்கும் வாக்குக்கும் பொறிகளுக்கும் எட்டாதவன்; அணுவுக்குள் அணுவாக இருப்பவன்; நுட்பத்திலும் நுட்பமாக இருப்பவன். ஆனாலும் மனம் உடைய மக்களுக்கு அருள்புரிவதற்காக வடிவங்களை எடுத்து வருகிறான்.

காற்று வடிவில் இருக்கும் நிலையில் தண்ணீர் கண்ணுக்குத் தெரியாது. பிராணவாயு ஒரு பங்கும் ஜலவாயு இரண்டு பங்கும் சேர்ந்தால் நீர் ஆகும். அந்த வாயுக்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை. அவை இரண்டும் கலந்தால் மேகமாகிப் பிறகு தண்ணீர் ஆகின்றன. நீர் மழையாகப் பெய்கிறது; அருவியாக விழுகிறது; பிறகு நிலத்தில் ஆறாக ஓடுகிறது. அதைக் காணலாம்; அதில் ஆடலாம்; குடிக்கலாம்.

தண்ணீருக்கு உருவம் (form) உண்டு; ஆனால் வடிவம் இல்லை. கண்ணிலே காண்பதனால் உருவம் உண்டு. உருண்டை, தட்டை என்பது போன்ற பரிமாணம் இல்லாமையால் வடிவம் (shape) இல்லை. ஆனால் தண்ணீரைக் குடத்தில் எடுத்து வைத்தால் குடத்தின் வடிவத்தைப் பெறுகிறது; செம்பில் எடுத்து வைத்தால் செம்பின் வடிவத்தை உடையதாகிறது. பாத்திரத்திற்கு ஏற்ற வடிவத்தைப் பெறுகிறது.

இறைவனும் சர்வசூட்சுமமாக இருக்கிறான். கருணையினால் கண்ணால் காணும் பெருஞ்சோதியாக வருகிறான். பிறகு திருமேனியும் உறுப்புக்களும் படைத்த மூர்த்திகளாக எழுந்தருளுகிறான்; அன்பர்களின் உள்ளத்தில் அத்தகைய வடிவங்களுடன் காட்சி அளிக்கிறான். அவர்கள் அருட்கண்ணால் அந்த வடிவங்களைப் பார்க்கிறார்கள்.

''அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே''

என்றும்,

''அருட்கண்ணால் நோக்காதார் அல்லா த ரே''

என்றும் அப்பர் சுவாமிகள் பாடுவார்.

அவ்வாறு இறைவனுடைய திவ்ய தரிசனத்தை அருட்கண்ணால் தரிசித்த பெரியவர்கள் புறக்கண்ணிலும் காணுகிறார்கள்.

''திருக்கண்டேன்; பொன்மேனி கண்டேன்; திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்''

என்று பெருமிதம் கொள்கிறார்கள்.

எல்லாரும் அப்படிப் பார்க்க முடியுமா? அதற்குரிய பக்குவம் யாவருக்கும் இருப்பதில்லையே! இதை உணர்ந்த அருளாளர்கள் தாம் கண்டதைச் சொல்லுகிறார்கள். சொல்லால் வடித்த அந்த வடிவத்தைக் கல்லாலும் செம்பாலும் வடித்துத் தரிசிக்கும்படி செய்கிறார்கள். நேரே பார்க்க முடியாமல் நெடுந்தூரத்தில் உள்ள ஒருவருடைய வடிவத்தைப் படத்திலும் போட்டோவிலும் கண்டு களிப்பவர்களைப் போல எல்லா மக்களும் இறைவனைப் பல்வேறு வடிவங்களில் கண்டு அன்பு செய்ய முடிகிறது.

அவ்வாறு இறைவனுடைய திருக்கோலங்களைக் கோயிலில் கண்டவர்கள், அன்பு மீதூர்ந்து உள்ளத்தில் தியானிக்கிறார்கள். அவர்களுடைய பக்குவத்திற்கு ஏற்றபடி பயன் உண்டாகிறது. உள்ளக் காட்சியில் ஒளி உண்டாகிறது. இறைவன் தன் வடிவத்தோடு நிற்கிறான். அருட்கண் உண்டாகிறது; அப்போது அருளாளர்கள் கண்ட காட்சியை அவர்களும் காணுகிறார்கள். பிறகு சோதிவடிவாய்த் தரிசிக்கிறார்கள். வடிவம் மறைந்து உருவாகி, பிறகு அதனோடு கரைந்து தம்மை மறக்கிறார்கள்.

ஏணியில் இறங்கி வந்து கீழே இருப்பவனை மேலே ஏறச்சொன்னது போன்றது இது. இறைவன் அருவிலிருந்து உருவாகவும் வடிவாகவும் இறங்கி

வருகிறன்; விக்கிரகமாகக் காட்சி அளிக்கிறன். விக்கிரகத்தைக் கண்டு அன்பு செய்தவர்கள் மெல்ல மெல்லப் படிகளில் ஏறி உரிய இடத்தை அடைவதைப் போல இறைவனை அடைகிருர்கள். படிகளைச் சோபானம் என்பார்கள். கீழிருந்து மேலே ஏறும்போது பல படிகள் இருந்தாலும் நான்கு நிலைகளாகப் பிரித்துச் சொல்வது வழக்கம். அவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பர். சரியையும் கிரியையும் புறத்தில் நிகழும் செயல்கள். கோயிலை வலம் வருவது, இறைவன் திருக்கோலத்தை வணங்கி வழிபடுவது முதலியவை சரியை. பிறர் பூசை பண்ணுவதைப் பார்த்து வணங்குவது இது. தாமே பூசை செய்வது கிரியை. புறத்தே செய்வதை உன்முகமாகச் செய்வது யோகம். மனம் அலையாமல் ஒருமைப்பட்டு நிற்க உள்ளே இறைவனைத் தரிசிக்கும் நிலை இது. இதற்கு மேல் எல்லையிறந்த அநுபவத்தை, அகண்டாகார விருத்தியில் தெளிவுற்று அமைவது ஞானம்.

சரியையிலும் கிரியையிலும் ஆண்டவனுடைய செயற்கை வடிவங்களைப் பார்க்கிறோம். அந்த வடிவங்கள் இறைவனே எடுத்த வடிவங்கள் அல்ல; அவன் எடுத்த மூர்த்திகளின் சின்னங்கள்; போட்டோக்களைப் போன்றவை. யோகத்தில் அவனுடைய வடிவங்களையே காணலாம். அப்போது அவன் உள்ளே வந்து கோலம் காட்டி இயங்குவான்; பேசுவான். ஞானநிலையிலோ இந்தக் கோலம் மறைந்து அகண்ட சோதியாகிக் காண்பான், காணப்படும் பொருள், காட்சி என்றும், மூன்றும் இல்லாத அநுபவம் உண்டாகும்.

திருக்கோயில்களில் உள்ள மூர்த்திகளைப் பக்தன் இறைவனுகவே பார்க்கிறன்; களிக்கிறன்; கண்ணீர் விடுகிறன். பிரிந்து சென்றிருக்கும் காதலனுடைய படத்தை வைத்துக்கொண்டு காதலி பார்த்துப் பார்த்து மகிழ்கிறள். அந்தப் படத்துக்கே முத்தமிடுகிறள். உணர்ச்சி மிகுதியினல் உண்டாகும் விளைவுகள் இவை.

பக்தனுக்கு இறைவனுகத் தோற்றும் வடிவம், அல்லாதவனுக்குக் கல்லாகத் தோற்றுகிறது. பக்தன் உணர்ச்சியோடு பார்க்கிறன். மற்றவனே அறிவோடு பார்க்கிறன். சுவாமியின் மேல் கரப்பான் பூச்சி ஊர்வதைப் பார்த்த அவன், ''இந்தக் கரப்பான் பூச்சியிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ளாத சாமி நம்மைக் காப்பாற்றுமா?'' என்கிறன். பாவம்! அவன் மூளை வேலைசெய்கிறதேயன்றி இதயம் ஈடுபடுவதில்லை. இதய உணர்ச்சியுடன் ஈடுபடும் பக்தனே படிப்படியாக மேல் ஏறுகிறன்.

இறைவனுடைய வடிவத்தை விக்கிரகமாகப் பார்க்கும் நிலையில் இறைவனுடைய இயல்பான உருவம் தெரிவதில்லை. படிகளெல்லாம் கடந்து மேலே போனவனுக்கும் எல்லாம் மறந்த நிலை வருகிறது; அங்கும் உருவம் தெரிவதில்லை. உருவத்தைக் காணும் கண்ணே இல்லாத, திரிபுடி அற்ற நிலை அல்லவா அது?

இவ்வாறு கீழ்ப்படியில் உள்ள அநுபவத்தையும் மேற்படியில் உள்ள அநுபவத்தையும் எண்ணிப் பார்க்கிருர் காரைக்கால் அம்மையார். பக்தி பண்ணப் புகுந்தபோது திருக்கோயிலில் உள்ள வடிவத்தைக் கண்டு வழிபட்டார்; இறைவனுக்கு ஆட்பட்டார். அப்போது அவனுடைய இயல்பான திருவுருவத்தைக் காணும் நிலை உண்டாகவில்லை. ஆனல் பக்தி உணர்ச்சி குறையவில்லை.

**அன்றும் திருவுருவம் காணதே ஆட்பட்டேன்**

என்று அந்த நிலையைச் சொல்கிருர்.

இப்போது படிகளையெல்லாம் கடந்து மேலே வந்துவிட்டார். திரிபுடி அற்ற நிலை இது. காண்பான், காணப்படும் பொருள், காட்சி எல்லாம் கடந்த அநுபவத்தில் திளைக்கும் நிலை இது. இப்போதும் திருவுருவம் தோன்றவில்லை; அதிலேயே கரைந்துவிட்ட பிறகு அதைத் தனியே பார்க்க முடியுமா?

**இன்றும் திருவுருவம் காண்கிலேன்!**

இருட்டிலே போவோருக்கும் கண் தெரியாது; ஜகஜ்ஜோதியான சூரியனைப் பார்க்கும்போதும் கண் தெரியாது. இரண்டு நிலைகளிலும் கண் பார்க்கும் ஆற்றலை இழந்தாலும் இரண்டு நிலைகளும் ஒன்று அல்ல; ஒன்று தாழ்ந்த நிலை; மற்றென்று உயர்ந்த நிலை. கீழே இருப்பவனுக்கும் ஏணி வேண்டாம்; மாடிக்குப் போனவனுக்கும் ஏணி வேண்டாம். இதைப் போன்ற நிலைகளையே அம்மையார் சொல்கிருர். முதல் நிலை, வடிவமாகக் கண்டு இயற்கை உருவத்தைக் காணும் ஆற்றல் பெருத நிலை. இறுதி நிலையோ உருவத்தைக் காணும் ஆற்றலை, கருவிகளை இழந்த நிலை.

**அன்றும் திருவுருவம் காணதே ஆட்பட்டேன்;**
**இன்றும் திருவுருவம் காண்கிலேன்.**

- இந்த முரண்பாடான நிலைகள் எல்லோருக்கும் விளங்குவதில்லை. அவர்கள் விக்கிரகத்தை வணங்கு

வதனல் என்ன பயன் என்று நினேக்கிருர்கள். அவர்கள், உலகத்திலுள்ள பிற வடிவங்களேப் பார்த்துப் பழக்கப்பட்டவர்கள். ஒரு மனிதன் என்ருல், அவனுக்கு உரிய அங்க அடையாளங் களேத் திட்டமாகத் தெரிந்து கொண்டவர்கள். அவர்கள் அம்மையாரைக் கேட்கிருர்களாம். "உங்கள் பெருமானுக்கு நிலேயான உருவம் உண்டோ? என்றைக்கும் உள்ள உருவம் எது ? எம்பிரான் எந்தத் திட்டமான வடிவத்தை உடையவன்?" என்று கேட்கிருர்கள். "இதுதான் அவன் உருவம்" என்று திருக்கோயில் விக்கிரகத்தைச் சுட்டிக் காட்டலாமா? "இது சிற்பி வடித்தது அல்லவா? இது உங்கள் பெருமானுனல், பேச வில்லேயே! நடராசன் என்கிறீர்கள்; காலேத் தூக்கிய படியே நிற்கிருனேயன்றி ஆடவில்லேயே! அசைய வில்லேயே! இது வெறும் பொம்மையல்லவா?" என்று கேட்கிருர்கள்.

அவர்களுக்கு மேல் நிலேயைச் சுட்டிக் காட்டலாம் என்ருல் அதைச் சுட்டிக் காட்ட முடியுமா? தம்மையே மறந்த நிலே அது. அதை எப்படிச் சொல்லுவது? எப்படிக் காட்டுவது?

"இப்படி எல்லாம் கேட்பவர்களுக்கு நான் என்ன விடை சொல்வேன்? அந்தக் கேள்விகளே உன்னிடமே சமர்ப்பிக்கிறேன். நீயே விடை சொல்" என்று எண்ணியவரைப் போல இறைவனேயே நோக்கி வினவுகிருர்.

"எம்பெருமானே, 'என்றைக்கும் நும்பிரான் எந்த உருவத்தை உடையவன்?' என்பவர்களுக்கு அடியேன் என்ன விடை பகருவேன்? எந்தஉருவத்தைச் சொல்வது? நின் உருவம் எது?" என்று கேட்கிருர். அதுவே பாடல் உருவை எடுக்கிறது.

**அன்றும் திருஉருவம் காணுதே ஆட்பட்டேன்;**
**இன்றும் திருஉருவம் காண்கிலேன் ;**
**—'என்றுந்தான்**
**எவ்வுருவோன் நும்பிரான்?' என்பார்கட்கு**
**ஏதுஉரைப்பேன்?**
**எவ்வுருவோ நின்உருவம் ஏது?**

[எம்பெருமானே, உன்னே வழிபடத் தொடங்கிய அந்தக் காலத்திலும் உன்னுடைய இயல்பான திருவுருவத்தைக் காணுமலே உனக்கு அடிமையானேன்; உன்னுடைய திருவருளால் உன் அருளநுபவத்தைப் பெற்றுநிற்கும் இப்போதும் உன் திருவுருவத்தை நான் காணவில்லே. 'உம்முடைய கடவுள் என்றைக்கும் எந்த உருவத்தை உடையவன்?' என்று கேட்கிறவர்களுக்கு நான் எந்த விடையைச் சொல்வேன்? எந்த உருவத்தைச் சொல்வது? நின் உருவம் எது?

அன்றும் என்பது நெஞ்சறி சுட்டு; சரியைக் காலத்தைச் சுட்டியபடி. ஆட்படல்-அவனுக்கு அடியாராக அமைதல். இன்று என்றது அநுபவம் முற்றிய நிலேயைப் பெற்ற காலத்தைக் குறிப்பது. என்றுந்தான் : தான், அசை. எவ்வுருவோ - அவர்களுக்கு உரைப்பது எந்த உருவத்தை. நின் உருவம் ஏது – உனக்கு உருவம் ஏது; இயல்பாக இல்லே என்றும் பொருள் கொள்ளலாம்.]

அற்புதத் திருவந்தாதியில் 61 - ஆம் பாடல் இது.



கல்லேக் குவித்துப் பெரிய கோயில்கள் ஏன் கட்டுகிறீர்கள்? தெய்வம் உள்ளுக்குள்ளே இருப்பதை அறியாமல் ஏன் தொல்லேப்படுகிறீர்கள்?

**—கவி வேமண்ணு**

மனிதனுக்குப் பகை புறத்தே இல்லே. நமக்குள்ளே சத்துருக்கள் மலிந்து கிடக்கிருர்கள். பயம், சந்தேகம், சோம்பல் முதலிய குணங்கள் நம்மை வெற்றியடையவொட்டாமல் தடுக்கின்றன.

**— திருநாவுக்கரசர்**



இரண்டு கால்களேயும் தூண்களாக நிறுத்தி, முதுகெலும்பை விட்டமாக அமைத்து, விலா எலும்புகளேக் குறுக்குக் கழிகளாகப் போட்டுத் தோல் எனப்படும் கூரையால் மூடப்பெற்ற நடமாடும் குடிசைதான் இந்த உடம்பு! அறிவில்லாதவர்கள்தாம் இதைப் பார்த்து மகிழ்வார்கள்.

**—அறநெறிச்சாரம்**



# இறைவனின் சிரிப்பு

எஸ். சுப்புலட்சுமி எம். ஏ.

தில்லைநாயகன் அம்பலத்தில் ஆனந்தமாக ஆடிக்கொண்டிருக்கிறான்; அந்தப் பேரானந்தத்திற்குக் காரணம் என்னவாக இருக்க முடியும்?

இதோ, அவன் கால்விரல் நுனியினால் எட்டி உதைக்கப்பட்ட ஒரு சிறு பந்து, அண்ட சராசரத்தின் ஏதோ ஒரு மூலையில் போய்த் தொற்றிக் கொண்டு வேகமாகச் சுழல்கிறது. அதைக் காணக் கான இன்பப் பெருக்கெடுக்கிறது அம்பலக் கூத்தனுக்கு! விளையாட்டில் மகிழும் குழந்தை போல, இந்தப் பந்து சுழலும் காட்சியைப் பார்த்துப் பார்த்து ஆனந்திக்கிறான்!

ஆம், நம் கண்களில் நித்திய சொர்க்கமாக-எல்லாமாகக் காட்சியளிக்கும் இந்த உலகம், அந்த நாட்டியப் பிரியன் சிவபெருமான், விளையாட்டாக விட்டெறிந்த ஒரு சிறு பந்துதான்!

திருவரங்கப் பெருமான் ஆழ்ந்த நிம்மதியில் அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கிறான்; அந்தப் புனித நித்திரையில் ஒரு கனவு.

கனவுத் திரையில் பலப் பல உயிரினங்கள் அலைகின்றன; பெயர், மனிதர்களாம். நான்கு கால் கொண்டவை பிராணிகளாம். பறவைகள், செடி கொடிகள், பஞ்ச பூதங்கள் இப்படி எத்தனை எத்தனையோ! இத்தனை சித்திரங்களும் இயற்கை என்ற பின்னணியில் வண்ணத் தூரிகைகளால் தீட்டப்பட்டுள்ளன.

ஆக, 'உலகம்' என்பதே எல்லாம் வல்ல இறைவனின் விளையாட்டுப் பந்து.

கம்பன் மொழியில் கேட்டால்,

உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே.

உலகம் இறைவனின் ஓர் அழகிய கனவாம். எத்தகைய இனிய கற்பனை!

இந்தக் கற்பனை வானிலிருந்து சற்றுச் சிரம் தாழ்த்தி நம் நிலைக்களனான மண்ணுலகை உற்று நோக்கினால், மனிதக் கூட்டங்கள் தம்மிடையே இட்டுக்கொள்ளும் பெருஞ் சண்டையின் பேரொலி தான் நன்றாகக் கேட்கிறது! இதற்கு மத்தியில் சில இனிய கீதங்கள்!

மலர்கள் அன்றாடம் மலர்ந்து மணம் பரப்புகின்றன; அந்த மணத்தில் அவை தெரிவிக்கும் செய்தி ஒன்று உண்டு: 'இறைவா! உனது இனிய திருவிளையாடலில்—சுற்றிச் சுழலும் உலகப் பந்தில்—எங்களுக்கும் ஓர் இடமளித்தனை. உனக்கு எங்கள் இனிய மணத்தால்—மாலைப் பொழுதுவரை கூடக் காத்திருக்க இயலாததால் இப்பொழுதே நாங்கள் நன்றி சொல்லிக் கொள்கிறோம்' என்பது போல், வீசும் மெல்லிய பூங்காற்றில் மணம் பரப்பித் தூதனுப்புகின்றன.

ஆண்டவனுக்கு வான்மழை, நன்றிக் கண்ணீர் பெருக்குகிறது, அவனது கனவுக் காட்சியில் தனக்கும் ஓரிடம் வழங்கியதற்காக.

விலங்குகள் தங்களுக்கு இட்ட பணியை நிறைவேற்றுவதன்மூலம் இறைவனின் விளையாட்டில், கனவில், நிலையான பங்கு பெறுகின்றன.

அக்கினிதேவன் தனது செந்தழல் கரங்களைக் கூப்பி, அன்றாடப் பணியைச் செய்துகொண்டே ஆண்டவனுக்கு நன்றி கூறுகிறான்.

இப்படியே உலகச் சக்கரத்தில் சுழல விடப்பட்ட ஒவ்வொன்றும் தன் கடமையை அமைதியாக ஆற்றுவதன் வாயிலாக, கடவுள் கணக்கேட்டில் முதன்மை இடத்தைப் பெறத் துடித்துக்கொண்டிருக்கிறது. ஆனால், மனிதன்...? ஆறறிவு பெற்றான், ஆனால் அதை முறையாக அனுபவிக்க மறுத்தான்!

'When much is given, much will be demanded-அதிகம் பெற்றவனிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கப்படும்' என்பதையே மறந்து, தன்னிலை

தாழ்ந்து, விலங்கினும் கீழாய், வினையைத் திரிவதையே விரும்பி ஏற்கிறன். சுயநலம் அவன் சொந்த நிலம். இதில்தான் அவன் ஏராளமான களைகளைப் பயிர் செய்துகொண்டிருக்கிறன்!

மனிதன் தனக்கு வழங்கப்பட்டிருக்கும் பெரும் பரிசான 'ஆன்மா'வின் குரலை அடிக்கடி புதைத்து விட்டு அதன்மேல் சாம்பல் மாளிகை எழுப்பிக் கொண்டிருக்கிறன். 'இது நல்லது; இது தீயது' என்று பகுத்துணர வழங்கப்பட்ட பேரறிவைத் தான் புரியும் இதயமற்ற செயல்களுக்கு இலக்கணம் கற்பிக்க மட்டுமே பயன்படுத்துகிறன்.

சொல் ஒன்றும் செயல் ஒன்றுமாகச் செய்து திரிபவரே, புகழ்மரத்தின் உச்சாணிக் கொம்பில் ஒய்யாரமாக ஊஞ்சலாட இயலும். 'Milk of human kindness' என்று ஷேக்ஸ்பியர் குறிப்பிட்ட மனிதாபிமானம் தற்காலத்தில் விடைபெற்றுச் செல்லத் தயாராக நிற்கிறது.

'தெய்வ சிந்தனை' என்பது மனித வாழ்வு என்ற புகைவண்டி செல்லும் தண்டவாளமாக அவனுக்குத் தோன்றவில்லை. ஏதோ ஒரு புகைவண்டி நிலையமாகத்தான் காட்சியளிக்கிறது. வாழ்க்கைப் பயணம் தடைப்படும்போது, சற்று நின்று தன்னையே தேற்றிக்கொள்ளக் கிடைத்த ஒரு தற்காலச் சாந்தியாக-ஒரு சுமைதாங்கியாக மட்டுமே தெய்வ நினைவைக் கருதுகிறன்.

அல்லது, மனிதனின் கணிப்பில் இறைவன் ஒரு முதலாளி. அவன் புகழைப் பாடிப் பணிவதனாலேயே அவன் அருளைப் பெற முடியும் என்ற பலவீனமான எண்ணம் மனிதனை முழுதாக ஆக்கிரமித்துள்ளது. சற்றும் கடமையுணர்வு அற்றவனாகவே மனிதன் பெரும்பாலும் தோன்றுகிறன்.

மேடையில், சத்தியத்தின் புகழைக் காப்பவன் போல் மனிதனின் தோற்றம். திரைக்குப் பின், பலி பீடங்கள்தாம் அவன் எஜமானர்கள்.

மனித வாழ்க்கை இறைவனை அடையக் கிடைத்த இறுதிச் சந்தர்ப்பம். இதை உணராத மனிதன், இன்பத்தின் பின்னே, நாயினும் நலிந்து அலைந்து கொண்டிருக்கிறன்; தனது மானுட உடம்பு, வெறும் 'ரத்தபித்த மலமூத்ர நாடி நரம்பு தோல் எலும்பு' களின் தொகுப்பே என்ற தத்துவம் அவன் புத்திக்கு எட்டவில்லை.

உலக அழகிதான் கிளியோபாட்ரா; அது ஏதோ ஒரு முப்பது அல்லது நாற்பதாண்டுக் கதை; அவ்வளவுதான்! இன்று அந்த அழகு எங்கே? வெறும் மாயமாக மறையும் எழில்!

மாவீரன் அலெக்சாண்டரின் பெருவெற்றிகள் வரலாற்று ஆசிரியருக்குச் சில பக்கங்களுக்கான விஷயம்; வேறென்ன?

பெரும் சாதனைகள் நிகழ்த்தியவர்களின் கதியே இது என்றால், அன்றாட அற்ப இன்பங்களின் பின்னே ஓடிக்கொண்டிருப்பவன், ஒரு பிடி சாம்பலானபின்......?

இவற்றையெல்லாம் சிந்திக்க மனிதனுக்கு நேரம் ஏது? ஆன்மிகம் தவிர மற்ற அனைத்தும் அற்பமானவையே அல்லவா? வாழ்வாங்கு வாழ்ந்தால் கிட்டும் மனச்சாந்தியின் பேராற்றலை அறிய மறந்து திரிகிறனே! இப்படி எத்தனையோ பனிப்படலங்கள் மனிதமனத்தைச் சுற்றிப் படர்ந்துள்ளன.

இத்தகைய மனித விசித்திரங்களைப் பார்த்து இதோ சிருஷ்டிகர்த்தா சிரிக்கிறன். இது ஆனந்தச் சிரிப்பல்ல; விரக்திச் சிரிப்பு; வேதனைச் சிரிப்பு.

"மனிதா! என் மகனே! உன்னை உலக உயிர்கள் அனைத்திலுமே உயர்வாகப் படைத்தேன். காணக் கண்; பேச நாவு; கேட்கக் காது; நுகர நாசி; உணர உடல்; சிந்திக்க அறிவு; வாழ ஆயுள்; இத்தனையும் போதா என்று இன்னும் எதை எதையோ வேண்டி என்னைப் பணிகிறயே அளித்த வரங்களுக்கு நீ ஆற்றிய பணி போதுமா? கடவுள் வெறும் காமதேனுப் பசுவா? சற்றுச் சிந்தித்துப் பார்த்தாயா?

"உனக்கு நல்வழி காட்ட எத்தனை முயற்சிகள்! யுகத்துக்கு யுகம் எத்தனை அவதாரப் பிறப்புக்கள்! மனிதா! நீ அவர்களை மிக உயரத்தில் இருத்தி, வணங்கக் கற்றுக்கொண்டாய்; வாழக் கற்றுக் கொள்ளவில்லை!

"ஸ்ரீராமபிரானின் சத்திய விரதம், உனக்கு அதிசயத்தை மட்டும் தந்தது; அதன் அவசியத்தைக் காற்றில் பறக்க விட்டுவிட்டாயே! என் படைப்புக்களிலேயே உன்னை மிக உயர்ந்தவனாகப் படைக்கக் கருதித்தான் ஆறறிவு தந்தேன்; சிந்திக்கும் திறன் தந்தேன்; பேசும் ஆற்றல் தந்தேன்; சிரிக்கும் கலை தந்தேன். ஆனால் நீயோ சிந்தித்தாய்—பகைவனை எப்படி வீழ்த்தலாம்

என்று. சிரித்தாய்—மற்றவன் வீழ்ச்சியைக் கண்டு, பேசினாய்—மற்றவன் குற்றத்தை!

''தாலாட்டுப் பாடுவாய் என்று நான் நம்பித் தந்த நாவால், உலக இன்பங்களுக்காகப் பிச்சையெடுத்துப் பாடிக்கொண்டிருக்கிறாய்! வீணை தந்தேன்; இனிய கீதம் மீட்டுவாய் என்பதற்காக. அதை வைத்து விறகு ஒட்டடை அடித்துக் கொண்டிருக்கிறாய்!

''மனச் சாட்சி எனது ஒரே மந்திரி. அவனை உனக்குத் துணையாக அனுப்பி வைத்தேன். ஆனால் நீயோ அவனை உன் எதிரியாகவே கருதுகிறாயே! அவன் உன்னுள்ளிலிருந்து ஒரு சத்தியநாதம் எழுப்பும்போது நீ செவிடன் போல இருந்து விடுகிறாய். என் தமிழ் மைந்தன் பாரதி, நொந்து பாடினானே—

நெஞ்சு பொறுக்குதில்லையே—இந்த
நிலை கெட்ட மனிதரை நினைந்துவிட்டால்

என்று. அப்படி இருக்கிறது என் நிலை. மனிதனுக்கு மட்டும் என்று நான் அளித்த அரிய பொக்கிஷங்களை எப்படிப் பாழுங் கிணற்றில் அள்ளி வீசிக் கொண்டிருக்கிறாய்?

''மனிதா! உன்னைவிடத் தாழ்ந்தவை என்று தானே விலங்குகளையும் மற்ற உயிர்களையும் நினைக்கிறாய்? நண்பனைக் கொல்லும் நயவஞ்சக புருட்டஸ் (Brutus)களை அங்கே காண்பது அரிது. ஆசைவலையில் அகப்பட்டு, மீளும் வகையறியாமல் உழலும் அற்பர்களை—மாக்பெத் (Macbeth)களை—அங்கே பார்க்க முடியுமா? பொய்யர் பொறாமைக்காரர்கள் சுயநலவாதிகள் அங்கே சொற்பமே!

''மனிதா! உன்னைப் படைத்தவன் உன் இழிநிலை கண்டு கண்ணீர் வடிக்கிறேன்; இதை உனக்குச் சொல்லியும் விட்டேன்; இனிமேலாவது என் கண்ணீர் துடைக்க ஓடி வரமாட்டாயா?'' என்று வேதனையோடு இறைவன் வினவுகிறான்.

சிருஷ்டிகர்த்தாவின் சிறு விளையாட்டில், இனிய கனவில், பங்கு பெறும் பேறு பெற்றதே அவன் அருள்மழையால்தான் என்பதை உணர மறந்து உலவிக்கொண்டிருக்கிறான் மனிதன்.

ஆனால், தன் பேரன்பை உணராத பிள்ளையைத் தனிக் காட்டில் விட்டு வர, பெற்றவளின் மனம் சம்மதிக்குமா ? அதுபோல் ஆண்டவன் துவாபர யுகக் கிருஷ்ண கீதையாகவும், கலியுக விவேகானந்த போதனையாகவும் தன்னையே தன் மக்களுக்கு உணர்த்துகிறான். இவை இரண்டும் இறைவன் நமக்கு அளித்த அமுதம்.

கீதாசிரியனின் திருவாக்குத்தான் நம்மை நேர்மையான பாதையில் அழைத்துச் செல்ல வந்த திருவிளக்கு. 'கடமையைச் செய்; பயனைக் கருதாதே.' மனிதன் தனக்கு இடப்பட்டுள்ள கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதுதான் அவனது முதல் தர்மம்; அதன் பயனைப் பார்த்தசாரதியின் பாத மலர்க்கே காணிக்கையாக நல்கும் பக்குவம் பெற வேண்டும்.

சுவாமி விவேகானந்தரின் வேதவாக்கு, 'இறைவன் எனும் மிகப் பெரிய ஜோதிப் பிழம்பிலிருந்து தெறித்த சக்திமிக்க பொறிதான் மனிதன்' என்பதை நினைவூட்டிக்கொண்டேயிருக்கும்.

''மனிதா ! உன் விதியை உருவாக்குபவன் நீயே, (You are the creator of your own life.)' ஆண்டவன் ஒருவனையே சிருஷ்டிகர்த்தாவாக இந்து மதம் கற்பிக்கிறது. ஆனால், சுவாமி விவேகானந்தர் மனிதனுக்குள்ளும் தன்னைத்தானே உருவாக்கிக்கொள்ளும் சக்தி இருப்பதை உணர்த்துகிறார். சுவாமி விவேகானந்தர் மனிதனுக்குள் உறங்கும் தெய்வத்தை மனிதனுக்கே அறிமுகப்படுத்துகிறார்.

கீதையின் பாதையில் பயணம் கொண்டான் அர்ஜுனன். நம் கண்முன் கலியுகம் காணும் கிருஷ்ண பகவானைக் காட்சியளிக்கிறார் சுவாமி விவேகானந்தர். இருபதாம் நூற்றாண்டுப் பிரதிநிதிகளுள் ஒவ்வொருவரும், அர்ஜுனர்களாக மாறி, சுவாமி விவேகானந்தரைச் சாரதியாக வணங்கி, அவர் போதனைகளின் வழிச் செல்வதே, நம் 'பாரதம்' வெற்றி காண ஒரே மார்க்கம். அதுவரை இந்த உலகமே ஒரு குருக்ஷேத்திரம்தான்.

கீதையும், பரமஹம்சரின் தவப் புதல்வராகிய சுவாமி விவேகானந்தரின் போதனையும் காட்டும் பாதையில் வாழ்வின் சாரமாகத் திகழும் புது யுகம் வருங்காலத்தில் நிச்சயம் மலரும். அப்போதும் சிருஷ்டிகர்த்தா சிரிப்பான். அது ஆனந்தச் சிரிப்பு. *

அருள்நெறிக் கதை:

# நரகம் கிடைத்தது!

நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சி இது :

இரண்டு நதிகள் சேரும் புனிதமான ஓர் இடத்தில் கௌசிகன் என்ற ஓர் அந்தணன் வாழ்ந்து வந்தான். அவன் சிறந்த பண்டிதனுகவும் விளங்கினுன். வாழ்க்கையின் ஒவ்வொரு நொடியையும் அவன் சாஸ்திரங்களில் சொன்னபடி கழித்து வந்தான்.

கௌசிகன் சாத்துவிகக் குணமுடையவன். ஒவ்வொரு நாளும் அவன் நதிகளின் சங்கமத்தில் நீராடி, மூன்று காலங்களிலும் சந்தி ஜபம் முதலியவற்றைத் தவருமல் செய்துவந்தான். தவறியும்கூட, பிறர் மனம் நோகும்படி அவன் பேசமாட்டான். பிறருக்கு அவன் தீமை விளைவித்ததும் கிடையாது.

இவ்விதம் ஆழ்ந்த புலமையும் கள்ளங்கபடமற்ற தன்மையும் கொண்ட கௌசிகனின் புகழ் வெகு தூரம் பரவியிருந்ததில் வியப்பு எதுவும் இல்லை.

ஒரு நாள் சில திருடர்கள் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் யாத்திரிகர்களாகிய மக்கள் ஓட்டமாக ஓடிஒளிந்து கொண்டார்கள். யாத்திரிகர்களைத் தேடி வந்த திருடர்கள் கௌசிகன் இருப்பதைக் கண்டனர். கௌசிகனைப்பற்றி அவர்களுக்கு நன்கு தெரியும். எனவே அவர்கள் கௌசிகனிடம், "ஐயா! தாங்கள் உண்மையையே பேசுபவர். உத்தம அந்தணர்களில் ஒருவர். கனவில்கூடத் தங்களால் பொய் பேச இயலாது. எனவே, தயவுசெய்து ஓடி வந்தவர்கள் எங்குச் சென்ருர்கள் என்பதைச் சொல்லுங்கள் " என்று வேண்டினர்.

கௌசிகனின் மனம் சஞ்சலப்பட்டது. 'ஓடி வந்தவர்கள் அருகிலுள்ள புதரில் ஒளிந்துகொண்டிருக்கிருர்கள் என்பது உண்மைதான். திருடர்களிடம் நான் சரியாகப் பதில் தராவிட்டால் பொய் பேசிய குற்றத்திற்கு உரிய பாவம் எனக்கு வந்து சேரும். உண்மையைப் பேசுவதுதான் தவம். அதுவே சிறந்ததும் நியாயமானதும் ஆகும். நான் உண்மையை மறைக்க விரும்பவில்லை' என்று கௌசிகன் சிந்தித்தான். அவனுடைய கண்கள் மூடியிருந்தன. உள்ளத்திலோ உண்மை, பொய் ஆகியவை பற்றிய சர்ச்சை நிகழ்ந்துகொண்டிருந்தது.



பொறுமையிழந்த கொள்ளைக் கூட்டத்தினர் கௌசிகனிடம், "ஐயா! சத்தியவாதியான நீங்கள் உண்மை சொல்வதில் காலதாமதம் செய்யக் கூடாது. முன்பின் யோசிக்கவும் கூடாது" என்று சொல்லிக் கௌசிகனைப் புகழ்ந்தனர்.

அதற்குப் பதிலாகக் கௌசிகனின் விரல் 'அங்கே' என்பதற்கு அடையாளமாகப் புதரைச் சுட்டிக் காட்டியது. அவ்வளவுதான்! அடுத்த விநாடியே திக்கற்ற அந்த யாத்திரிகர்கள் அனைவரும் கொல்லப்பட்டார்கள். கௌசிகனுக்கு அதைப் பற்றி அக்கறையே இல்லை. அவனுக்கு உண்மைதான் பெரிதாக இருந்தது.

கௌசிகனுக்கு முடிவுக் காலம் வந்தது. அவனுடைய சத்தியம் மற்றவர்களுடைய அதர்மச் செயலுக்கு அடிகோலியதனுல் நரகத்திற்குச் செல்ல நேரிட்டது.

—மகாபாரதம்

# பொறுமைக்கு ஏகநாதர்

மகான் ஏகநாதர் கோபம் என்னும் சொல்லையே அறியாத அதிசய மனிதராக இருந்தார்.

ஒரு முறை சில கொடியவர்கள் எப்படியாவது ஏகநாதரைக் கோபம் கொள்ளச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தனர். அதன்பொருட்டு அவர்கள், ''யார் ஏகநாதரைக் கோபம் கொள்ளச் செய்கிறார்களோ அவர்களுக்கு இருநூறு ரூபாய் பரிசாகத் தரப்படும்'' என்று அறிவித்தனர்.

மகான் ஏகநாதரின் பெருமையை மக்கள் அறிவார்கள். ஆகவே தீயவர் பணம் தருவதாகப் பலமாகப் பிரசாரம் செய்துங்கூட, பணஆசை காரணமாக அந்த இழிந்த செயலைச் செய்ய எவரும் முன்வரவில்லை.

கடைசியாக ஒரு பிராம்மண இளைஞன் தன்னால் அந்தக் காரியத்தைச் செய்துவிட முடியும் என்று மார்தட்டிக்கொண்டு முன்வந்தான்.

மறுநாள் காலையில் அந்த இளைஞன் ஏகநாதரின் வீட்டை அடைந்தான் அப்போது ஏகநாதர் பூஜை யறையில் பூஜை செய்துகொண்டிருந்தார். வந்த இளைஞன் அந்த வீட்டுக்குள் நுழைந்தான். கைகால்களைக்கூடக் கழுவாமல் எவரிடமும் எதுவும் கேட்காமல் நேரே பூஜை யறைக்குச் சென்றான்.

ஏகநாதர் ஒருமுகப்பட்ட நிலையில் பூஜை செய்துகொண்டிருந்தார். இளைஞன் நேரே ஏகநாதரின் மடிமீது வந்து உட்கார்ந்துகொண்டான். இவ்விதம் செய்வதனால் ஏகநாதர் நிச்சயம் கோபம் அடைவார் என்று எதிர்பார்த்தே அவன் அவருடைய மடியின் மீது வந்து அமர்ந்தான்.

ஆனால் நடந்தது என்ன? ஏகநாதர் கோபமே கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் அவனைப் பார்த்து, ''குழந்தாய்! உன்னைப் பார்த்து எனக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது. நானும் எவ்வளவோ பேரைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் உன்னைப்போல் இவ்வளவு அன்புடன் யார் மடிமீது அமர்ந்துகொள்கிறார்கள்? உன் அன்பே விநோதமானது!'' என்றார்.

அந்தண இளைஞன் ஏமாற்றத்துடன் அவரையே பார்த்துக்கொண்டு சும்மா இருந்துவிட்டான்.

இளைஞன் மனதிற்குள், 'ஏதேது! இந்த மனிதனைக் கோபப்படச் செய்து சுலபமாக இருநூறு ரூபாய் அடைந்துவிடலாம் என்று நினைத்தது எவ்வளவு மடத்தனம்! இவரைக் கோபமடையச் செய்யவே முடியாதுபோல் தோன்றுகிறதே!' என்று எண்ணமிட்டான்.

இருந்தாலும் இருநூறு ரூபாய் ஆசை அவனை விடவில்லை. மீண்டும் வேறு முயற்சி செய்யப் பலத்த திட்டம் ஒன்றைத் தீட்டி வைத்துக்கொண்டான்.

உணவுக்கு நேரம் நெருங்கியது. ஏகநாதருக்கு அருகிலேயே அந்த இளைஞனுக்கும் இலை போடப்பட்டிருந்தது. இருவரும் உணவுக்கு வந்து அமர்ந்தனர். ஏகநாதரின் மனைவி கிரிஜாபாய் உணவு வகைகளைப் பரிமாறினாள். பிறகு நெய்யை இலையில் இடுவதற்காக அவள் கீழே குனிந்தாளோ இல்லையோ, உடனே டக்கென்று அந்த இளைஞன் கிரிஜாபாயின் முதுகின் மீது ஏறி அமர்ந்துகொண்டான். இந்தச் செயல் நிச்சயம் ஏகநாதரின் ஆத்திரத்தைக் கிளப்பிவிடும் என்று அவன் நினைத்தான். ஆனால் அவனுக்கு ஏமாற்றமே கிடைத்தது.

ஏகநாதரோ மிகவும் அமைதியாக மனைவியைப் பார்த்து, ''கிரிஜா! ஜாக்கிரதை! இளைஞர் கீழே விழுந்துவிடப் போகிறார்'' என்றார்.

கிரிஜாபாய் கணவருக்குக் கொஞ்சமும் சளைத்தவள் அல்லள். அவள் கணவன் கூறியதற்குப் பதில் அளிக்கும் வகையில், ''பயப்படாதீர்கள். எனக்கு நமது குழந்தை ஹரியை முதுகின்மீது சுமந்துகொண்டு காரியங்கள் செய்து பழக்கம். இந்தக் குழந்தையைக் கீழே போட்டுவிடுவேனா?'' என்று கூறினாள்.

தம்பதிகளின் பெருமைக்கு உரிய செய்கைகளைக் கண்டும் அவர்களின் அமைதியான பேச்சைக் கேட்டும் இளைஞன் வியப்படைந்தான். அவனுக்கு இருநூறு ரூபாய் தனக்குக் கிட்டும் என்ற எண்ணம் எங்கேயோ போய் ஒளிந்துகொண்டுவிட்டது. மிகவும் வெட்கத்துடன் கிரிஜாபாயின் முதுகிலிருந்து குதித்து ஏகநாதரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கோரினான்.

# இனிப்பும் கசப்பும்

ஹகிம் லுக்மான் என்பவர் சிறுவராக இருந்த போது ஒருவரிடம் அடிமையாக இருந்தார். ஒரு நாள் அவருடைய எஜமானருக்கு வெள்ளரிக்காய் சாப்பிட வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று.

எஜமானர், லுக்மானை அனுப்பி வெள்ளரிக்காய் களை வாங்கிவரச் செய்தார். ஒரு வெள்ளரிக் காயைச் சாப்பிடுவதற்காக வாயில் வைத்துக் கடித் தார். அவரது முகம் சுளித்தது. காரணம்: வெள்ள ரிக்காய் ஒரே கசப்பாக இருந்ததுதான். உடனே அவர் அந்த வெள்ளரிக்காயை அடிமையிடம் கொடுத்து, ''இந்தா! இதை நீ சாப்பிடு!'' என்றார்.

எஜமானர் கொடுத்ததை லுக்மான் பணிவுடன் வாங்கிக்கொண்டார். முகத்தைச் சுளிக்காமல் சுவைத்துச் சாப்பிட்டு முடித்தார். எஜமானர் அதை லுக்மானுக்குக் கொடுக்கும்போது, 'இப்படிப்பட்ட கசப்பான காயை ஒருவரும் தின்ன முடியாது; ஆகையால் இதை லுக்மான் விட்டெறிந்துவிடு வார்!' என்று நினைத்திருந்தார். ஆனால் நடந்ததைப் பார்த்து ஆச்சரியமடைந்த எஜமானர் லுக்மானை நோக்கி, ''லுக்மான்! இவ்வளவு கசப்பான வெள்ள ரிக்காயை எப்படித் தின்றாய்?'' என்று கேட்டார்.

லுக்மான் அதற்குப் பதிலாக, ''ஐயா! தாங்கள் எனக்குத் தினமும் சுவை மிக்க பல தின் பண்டங்களை அன்புடன் கொடுக்கிறீர்கள். உங்க ளுடைய தயவால் நான் பலவித நன்மைகளை அடைகிறேன். இவ்விதம் இருக்கும்போது தங்க ளின் கையால் ஒரு நாள் அளிக்கப்பட்ட வெள்ள ரிக்காய் கசப்பாய் இருந்தால் என்ன? அதை நான் ஏன் மகிழ்ச்சியாகச் சாப்பிடக் கூடாது? எனவேதான் அதைக் கசப்பு என்று நினைக்காமல் தாங்கள் கொடுத்தது என்று நினைத்துத் தின்று விட்டேன்'' என்றார்.

லுக்மானின் எஜமானர் சிறந்த அறிவாளி; இரக்க குணம் படைத்தவர்; தர்ம சிந்தையும் உடையவர். லுக்மான் அளித்த பதில் அவருடைய உள்ளத்தைத் தொட்டது. அதில் புதைந்திருந்த அற்புதக் கருத்தை அவர் உணர்ந்துகொண்டார். லுக்மா னிடம் அவர், ''லுக்மான்! நீ எனக்கு எவ்வளவு பெரிய உண்மையை உணர்த்திவிட்டாய்! கடவுள் நமக்கு எத்தனையோ சுகங்களை அளித்திருக்கிறார். அதே கடவுள் எப்போதாவது சிறிது கஷ்டத்தை யும் கொடுத்தால் அதையும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும் அல்லவா? இன்று முதல் நீ என் அடிமையில்லை. உன்னை விடுதலை செய் கிறேன்'' என்று கூறி அவரை விடுவித்துப் பல பரிசுகளை வழங்கினார். ☆

## வறட்டு அறிவு



ஒருவன் தன் மகன் இறந்துவிட்டதைக் குறித்துத் துயருற்று அழுது கொண்டிருந்தான். அப்போது கிறிஸ்தவப் பாதிரியார் ஒருவர் அங்கு வந்தார். அவர் அழுது கொண்டிருந்தவனிடம், ''ஆத்மாவுக்கு அழிவு இல்லையே. மரணம் உடலுக்குத் தானே? ஆகவே மகன் இறந்ததைக் குறித்து வருந்துதல் தகாது'' என்று உபதேசம் செய்தார்.

சில நாட்களுக்குப் பிறகு அந்தப் பாதிரியாரின் ஆடு இறந்து விட்டது. அவர் அழத் தொடங்கி விட்டார்.

அப்போது, மகனை இழந்த குடும்பஸ்தன் அங்கு வந்து பாதிரியாரிடம், ''அன்று நீங்கள் எனக்கு உபதேசம் செய்ததை மறந்து விட்டீர்களா? யார் இறந்தாலும் துயரம் கொள்ளக்கூடாது என்றீர்களே! இன்று ஏன் துக்கப்படுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதைக்கேட்ட பாதிரியார், ''அன்று உன் மகன்தானே இறந்தான்? இன்று என் ஆட்டுக்குட்டி அல்லவா இறந்துவிட்டது? ஆகையால்தான் அழுகிறேன்'' என்றார்.

—சத்தியகாமன்



# சன்மார்க்கத்துக்கு ஒரு சாரநாத்



நா. மகாலிங்கம் பி. எஸ்ஸி., எப்.ஐ.இ.

நான் தில்லி சென்றிருந்தபோது சாரநாத் என்னும் புனிதத் தலத்துக்கும் போயிருந்தேன். கொல்லாமையையும் கருணையையும் போதித்த வட பாரதத்தின் வள்ளற் பெருமான் புத்தர் இறுதியாகப் பரிநிர்வாணம் பெற்ற புனிதத் தலமே சாரநாத்தாகும்.

சாரநாத் காசியிலிருந்து ஏழு மைல் தூரத்தில் உள்ளது. காசியில் நிலவும் அமளிதுமளிக்கு நேர் மாருக, ஏழே மைல் தூரத்துக்குள் இப்படி அமைதியும் அழகும் அருளும் ததும்பும் ஓர் இடம் அமைந்திருப்பதைக் காசிக்கு வரும் பலர் அறிந்ததாகத் தெரியவில்லை.

சாரநாத்தில் அழகான புத்தர் ஆலயம் இருக்கிறது. சுமார் இருநூறு ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ள அந்த இடத்தைச் சுற்றிலும் அழகு பொங்கி வழிகிறது. பூங்காக்களும் தோட்டங்களுமாக அந்தப் புனித இடம் பொலிந்து மிளிர்கிறது. தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் பழைய புத்த விகாரங்களை இங்கே அண்மையில் கண்டுபிடித்திருக்கிருர்கள். அந்தப் புத்த விகாரங்கள் நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டும் பராமரிக்கப்பட்டும் வருகின்றன. யார் வேண்டுமானுலும் வந்து அங்கே தங்கவோ மாசுபடுத்தவோ அனுமதிக்காமல், புனிதமான கோட்பாடுகளைக் கடைப்பிடித்த உத்தமர்கள் உறைந்த இடம் என்கிற நினைவால், அதற்குப் புறம்பான எந்தச் செயலும் அங்கு நிகழ்ந்துவிடாமல் கண்ணுங் கருத்துமாக காத்து வருகிருர்கள். சாரநாத்தில் உள்ள புத்தரின் ஆலயத்தை, அந்த மதத்தைக் கண்ணெனப் போற்றுகிற ஜப்பானியர்களே அமைத்திருக்கிருர்கள். சமீபத்தில், சில ஆண்டுகளுக்கு முன், புத்தர் பெருமானின் 2500–ஆம் ஜயந்தி கொண்டாடப்பட்டது.

‘உயிர்க்கொலை கூடாது; கருணையே மனிதப் பிறவியின் உயிர்மூச்சு, இரக்கமே வாழ்வின்பொருள்’ என்கிற மகத்தான இலட்சியத்துக்காக, அரண்மனை, அரசபோகம், அழகிய மனைவி, ஆள், அம்பு, படை, பரிவாரம் முதலிய எல்லாவற்றையும் துறந்து வாழ்ந்த அந்தப் புனிதப்பெருமான் இறுதியாக வாழ்ந்த அந்த இடத்தைச் சுற்றி மூன்று மைல் விஸ்திரணத்துக்கு அவருடைய இலட்சியத்தைப் பரிபூரணமாக அந்த மாநில அரசு நிறைவேற்றி வைத்திருப்பதைக் கண்டு நான் மனமுருகி நின்றேன்.

சாரநாத்தைச் சுற்றி மூன்று மைல் சுற்றளவுக்கு யாரும் எவ்விதமான ஜீவஹிம்சையும் செய்யக் கூடாது; எந்தப் பறவையையும் சுடக் கூடாது; புலால் அறுக்கவோ சமைக்கவோ உண்ணவோ கூடாது என்பது மாநில அரசு அங்கே செய்துள்ள சட்டமாகும். இதைவிட உயர்ந்த சட்டம் வேறு எந்த உலகில் இருக்க முடியும்?

நம் அருமைத் தமிழ்நாட்டிலும் ஒரு சாரநாத் இருக்கிறது. அங்கேயும் புத்தரை ஒத்த ஒரு பெருமான் தங்கியிருந்தார். ‘உயிர்க்கொலை கூடாது; இரக்கமே ஊன் உயிர்; கொலையும் புலையும் தவிர்; கருணையே கடவுள்’ என்று வாழ்நாள் முழுவதும் அவர் உபதேசித்தார். ‘அருளே இறைவன் வடிவாம்; அன்பே அவன் உரு’ என்று திரும்பத் திரும்பச் சொன்னுர். அவர்தாம் மரணமிலாப்பெருவாழ்வை உபதேசித்த மகான் வடலூர்ப்பெருமான். ‘அருட்பெருஞ்ஜோதி தனிப் பெருங் கருணை’ என்ற தாரக மந்திரத்தை முழங்கி, மனிதகுலத்தின் சமய நெறியிலே எல்லோரும் எங்கும் புது நோக்கை, பொது நோக்கத்தைப் புகுத்திய இராமலிங்க அடிகளாவார்.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு நாட்டில் எங்கும் வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகளார் அவர்கள் அமைத்த சத்திய ஞான சபையைப் பற்றியே பேச்சாக இருந்தது. ‘சாதிசமயச் சழக்குகளை விட்டொழியுங்கள்; பசிப் பிணியைத் தீருங்கள்; மூட நம்பிக்கைகளை உதறி எறியுங்கள்; மரணமிலாப் பெருவாழ்வு பெறுவோம் வாருங்கள்’ என்று அவர் முழக்கிய அன்புக் குரல் தமிழ்நாடெங்கும் எதிரொலித்தது.

ஆயிரமாயிரமாக மக்கள் வடலூர்ப் பெருமானைத் தரிசிக்க வந்தார்கள். வந்தவர்களுக்கெல்லாம் சத்திய தருமசாலை உடலுக்கு இலவச உணவையும் சத்திய ஞான சபை உயிருக்கு ஞான உணவையும் வாரி வழங்கி வந்தன.

சாதி சமய வருண பேதமெல்லாம் வடலூர்ப் பெருமானின் ஞான ஒளியில் இற்று விழுந்தன. 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்கிற திரு மந்திரம் அங்கே புத்துயிர் பெற்றது.

சத்திய ஞான ஜோதியின் கருணை, அன்பு, சகோ தரத்துவம் ஆகிய கிரணங்கள் மக்களைத் தூய்மைப் படுத்தின. சுத்த சன்மார்க்க சுகநெறி பரவியது. வடலூர்ச் சத்திய ஞானசபை ஜோதிவிளக்கின் சுட ரொளியில் வள்ளற்பெருமான் அருட்பெருஞ்ஜோதி யாக அமைந்து அருள் செய்கிறார்கள்.

உலக மக்கள் எல்லோரும் உவந்து பாடி ஞான ஒளி எய்தும் வண்ணம் ஏராளமான அருட்பாக்களை இயற்றி, இன்றைய பகுத்தறிவுக்கும் பொருத்தமான தொரு வாழ்க்கை நெறியைக் கண்டு, தம் ஐம்பத் தோராம் வயதில் 1874-ஆம் ஆண்டு தை மாதம் பூச நட்சத்திரத்தில் வடலூர் அருகே மேட்டுக்குப்பம் என்ற கிராமத்தில், சித்திவளாகம் என்கிற மாளிகை யில் திருக்காப்பிட்டுக் கொண்டார்கள்.

வள்ளலார் வாழ்ந்த காலத்தில் சொல்லிவந்த சீரிய கருத்துக்களைப் பரப்பும் திருப்பணியைக் கடந்த நூறு ஆண்டுகளாகச் சன்மார்க்க சங்கங்கள் இடை விடாது நடத்தி வருகின்றன.

இந்த உலகத்தில் எத்தனையோ நாடுகளில் எத் தனையோ விதமான மதங்களும் வாழ்க்கை முறை களும் இருக்கின்றன. ஆயினும் நமது பாரதத்தில் உள்ளவை போன்ற மதச் செல்வங்கள் வேறு எங் குமே இல்லை. நம்முடைய தேவாரம், திருவாசகம், திவ்யப் பிரபந்தம், திருமந்திரம், திருப்புகழ் போன்ற ஞான நூல்களும், சைவ வைணவச் சித்தாந்தங் களைக் கூறும் தத்துவ நூல்களும் எங்குமே இல்லை என்று கூறி மகிழலாம்.

தமிழ்நாட்டின் ஞானச் செல்வங்களுக்கெல்லாம் தலையாயது சமரச சுத்த சன்மார்க்கம். புலால் மறுத்து, கருணை வளர்த்து, ஆன்மநேயத்தினால் ஆண்டவனை அடைய வழிகாட்டும் நன்னெறியாக அது அமைந்திருக்கிறது.

வள்ளற்பெருமான் தமது சன்மார்க்க நெறியைப் பரப்பப் படைத்த இடம் வடலூர்த் தலமாகும். வடலூர் மக்களே முன்வந்து சத்திய ஞான சபையை அமைக்க அவருக்கு எண்பது ஏக்கர் நிலம் அளித்தார்கள். அந்த இடத்தில்தான் இன்றைய தினம் சத்திய ஞான சபையும் வள்ளலார் பெருமானே ஏற்றி வைத்த அணையாத அருட் சோதியும், அன்பையும் கருணையையும் கொண்ட தருமசாலையும் உருவாகியிருக்கின்றன.

புத்த மதத்தினருக்குச் சாரநாத் புனித இடம் என்றால், வள்ளலார்பெருமானிடம் பரம பக்தி கொண்ட தமிழ்மக்களுக்கு வடலூரே புனித பூமி.

இன்றைய தினம் அந்த வடலூர் நிலையைப் பாராட்டிச் சொல்ல முடியாது. அந்த இடத்தை உபயோகிக்கும் மக்களும் வள்ளற்பெருமான் அருளிய வாழ்க்கை நெறிமுறைகளுக்கு மாறுபட்டு நடக்கச் சிறிதும் தயங்கவேயில்லை என்பதை வருத்தத்தோடு கூறத்தான் வேண்டும்.

கொல்லாமையை அருளிய அந்தப் பெருமான் வாழ்ந்த இடத்துக்கு மூன்று மைல் சுற்றளவுக் காவது அங்கு வாழும் மக்கள் கொல்லாமையைக் கடைப்பிடிக்கக் கூடாதா? உயிர்க் கொலையைத் தவிர்க்கக் கூடாதா?

நம் தமிழ்நாட்டு அரசின் கவனம் வடலூர்ப் பக்கம் கொஞ்சம் திரும்ப வேண்டும் என்பது என் கோரிக்கை. சாரநாத்தைப் போல் வடலூரையும் மூன்று மைல் சுற்றளவுக்கு 'உயிர்க்கொலை தவிர்க் கும் இடமாக' அறிவித்துச் சட்டமியற்றினால் அது அவர்களுக்கு மேலும் பெருமை தரும்.

வடலூர்ச் சத்திய ஞான சபையைச் சுற்றி ஒரு புது உலகமே உதயமாக வேண்டும். அதைச் சுற்றி யாரும் எந்தப் பறவையையும் விலங்கையும் சுடக் கூடாது. எந்த உயிர்க்கும் அங்கே இடர் தோன்றக் கூடாது. அங்கு வாழும் மக்கள் சன்மார்க்கிகளாய் வாழ வேண்டும். புலால் உணவைக் கொண்டு வரவோ சமைக்கவோ அறவே அனுமதிக்கக் கூடாது.

சத்திய ஞான சபையைச் சுற்றி மூன்று மைல் அளவுக்குப் பசிய மரங்கள் அடர்ந்த சோலையை உருவாக்க வேண்டும். அந்தச் சோலையில் மான்கள் துள்ளித் திரியவேண்டும், மயில்கள் ஆடவேண்டும். குயில்கள் கூவ வேண்டும். சோலைமலர்கள் பூத்துக் குலுங்க வேண்டும். அதனிடையே வள்ளலார் வகுத்த நெறிபற்றி ஆராய அறிஞர்கள் கூடவும் விவாதிக்கவும் பயிலவும் மண்டபங்கள் (சாரநாத் விகாரங்களைப் போல) அமைக்கப்பட வேண்டும். ஆயிரக்கணக்கான மக்கள் அமைதியாக அமர்ந்து, அருட்சோதி வள்ளலாரின் கருத்துக்களை அறிஞர் பெருமக்கள் விளக்கக் கேட்டு மகிழும் சன்மார்க்க மண்டபங்கள் உருவாக வேண்டும்.

இராமகிருஷ்ண மடத்துத் துறவிகளைப் போல் இங்கும் வள்ளலார் வழி பரப்பும் சிலத் துறவிகளைத் தயாரிக்கும் திட்டம் ஆரம்பிக்க வேண்டும். அந்தச் சத்திய ஞான வள்ளலார் மடத்துத் துறவிகள் உலகெங்கும் போய், வள்ளலார் வழியில் வாழ்ந்து காட்டிச் சமரச சன்மார்க்கப் பிரசாரம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யத் தகுதி படைத்த உத்தமர்களைத் தேடிப் பிடித்துப் பயிலுவிக்கும் நிறுவனம் தொடர்ந்து நடைபெற மாபெரும் முயற்சி மேற்கொள்ளப்படவேண்டும் என்பது என் விருப்பமாகும்.

இதையெல்லாம் சமரச சுத்த சன்மார்க்க சங்கங்களும் எங்கள் இராமலிங்கர் பணிமன்றமும் முடிந்த அளவு செய்து வருகின்றன: ஆனால் இன்னும் விரிவான முறையில் செயற்பட வேண்டியிருக்கிறது. உலகமெல்லாம் பல மொழி அறிவு படைத்த சன்மார்க்கத் துறவிகளைத் தயாரித்து அனுப்பும் பெரும் பணி இன்னும் தொடங்கப்படாமலே இருக்கிறது. அதற்குத் தக்க சூழ்நிலையையும், அடிப்படையான அமைப்பையும் உருவாக்க நினைத்து வருகிறோம். சூழ்நிலையை அரசாங்கம்தான் ஏற்படுத்த முடியும். வடலூர்ச் சத்தியஞானசபையைச் சுற்றி எல்லோரும் கொல்லாமையை அநுசரிக்க வேண்டும் என்று இராமலிங்க மிஷனோ, சன்மார்க்க சங்கங்களோ உத்தரவிட முடியுமா? அதை அரசுதான் செய்ய முடியும்; செய்ய வேண்டும்.

சமூகச் சீர்திருத்தத்துக்காகவும், மூட நம்பிக்கைகளை ஒழிப்பதற்காகவும், அரும்பாடுபட்ட புத்தரை மத்திய அரசு போற்றிக் கொண்டாடியது. அதே பணியைப் புரிந்து புத்தநெறிக்கும் மேலாக மரணமிலாப் பெருவாழ்வையும் உபதேசித்த இறைவனின் புனிதத் தூதரான இராமலிங்க வள்ளலாரைப் போற்றத் தமிழக அரசு தயங்காமல் முன்வர வேண்டும்.

வடலூர் அபிவிருத்திக்கு விசேஷ மானிய உதவியையும் தமிழக அரசு அளிக்க வேண்டும். சாரநாத் அபிவிருத்திக்காக உத்தரப் பிரதேச அரசாங்கம் உதவியதைக் கண்டதும் என் மனம் அன்றே இப்படி எண்ணத் தொடங்கிவிட்டது.

வள்ளலாரின் தொண்டுகள் தமிழ்நாட்டில் சிறிய அளவில் ஆங்காங்கே தொடர்ந்து நடந்துகொண்டு வந்தன. இன்றைய தினம் அவை மேலும் வளர்ந்து வருகின்றன. இராமலிங்க அடிகளின் அருட்பாவை ஆராய்ந்து பேசும் அறிஞர் கூட்டம் விரிவடைந்து வருகிறது. தமிழக அரசு ஆர்வத்தோடு உதவி வடலூர்ப் பெருவெளியைச் சன்மார்க்கத்துக்கு ஒரு சாரநாத்தாக அமைதி, அழகு, அருள் நிலவும் திருத்தலமாக மாற்ற வேண்டும். ☆

## ஸ்ரீ ராம நாமம்

வெற்றிவீரனுகிய ராமனே, நிலமேக வர்ணத்தையுடைய ராமனே! உன் திவ்ய நாமத்தை எந்நேரமும் உச்சரித்து வந்ததனுல் சிவபெருமானுக்கு ஆலகாலவிஷ உபாதையிலிருந்து நிவாரணம் கிடைத்தது.

ராமா, உன் திவ்யபாதகமலங்கள் பட்ட மாத்திரத்திலேயே அகலிகை சாபத்திலிருந்து விடுதலே பெற்று முன்பு இருந்த அழகிய உருவத்தைப் பெற்ளுள்.



ராமா, உன் நாமம் பொறிக்கப்பெற்ற பாறைகளை ஸ்ரீஆஞ்சநேயர் சமுத்திரத்தில் எறிந்த மாத்திரத்தில் அந்தப் பாறைகள் யாவும் உன் நாமமகிமையினுல் பஞ்சு போல் மிதக்கலாயின.

ராமா, உன் நாமத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே உலகத்தில் உள்ள தீய சக்திகள் யாவும் பயந்து நடுங்குகின்றன.

ராம, ராம என்ற உன் அரிய நாமத்தை உச்சரித்ததன் பயனுக, கணிகையான பெண் முக்தி நிலே பெற்ளுள்.

ராமநாமத்தின் மகிமையால் தேவாதிதேவர்களும் வானரசேனைகளும், பக்தர்களும் நன்மை பெற்றனர்.

ராமநாமத்தைக் கோகில கவி என்பவர் தம் கழுத்தில் தேக்கிக் கொண்டு தம் நாவினுல் எந்த நேரத்திலும் விடாமல் ஜபித்து வருகிறுர்.

இந்தக் கவி வர்ணித்திருப்பதைப் போல இந்தப் புனிதமான ஸ்ரீராமநாமத்தை எந்த நேரமும் துதிப்பதனுல் வாழ்வில் எல்லா இன்பங்களும் கிடைக்கின்றன. முக்திக்கு வழியாகிறது.

—மகாராஷ்டிர பக்தர் ஸ்ரீஏகநாதர்



# பக்தி நெறி

சுவாமி துரியானந்தர்

இடைவிடாமல் எப்போதும் பகவானையே நினைப்பதனால் மனம் தூய்மை பெறும். இதில் ஆச்சரியப்படுவதற்கே ஒன்றும் இல்லை.

அஞ்ஞானத்தில் இருக்கும்வரை 'நமது விருப்பங்கள் இறைவனின் விருப்பங்கள்தாம்' என்பதை நம்மால் தெளிவாக உணர்ந்துகொள்ள முடியாது. பகவான் சத்திய சங்கல்பம் உடையவர்; அவர் நினைப்பவை யாவும் உண்மையாகவே நடந்தேறும். ஆனால் மனிதனின் விருப்பங்களோ பலமுறையும் பொய்யாகப் போய்விடும். இந்தக் காரணத்தால் மனிதனின் விருப்பமும் இறைவனின் திருவுள்ளமும் ஒன்றாகத்தான் இருக்கின்றன என்று சொல்ல முடியாது. பகவானின் திருவருளால் உள்ளம் தூய்மையைப் பெறும்போது ஒவ்வொன்றைப்பற்றிய உண்மையும் தானாகவே தெளிவாக விளங்கிவிடும்.

சத்சங்கத்தினால் மிகச் சிறந்த நன்மை ஏற்படும். அதனால் மனம் தீய வழிகளை விட்டு நீங்கி, முக்தி நெறிக்குத் திரும்பும். எவர் ஒருவருடைய தொடர்பு காரணமாகப் பகவானைப் பற்றிய உணர்வு விழித்தெழுகிறதோ, அவரே உண்மையான துறவி. ஒருவர் நல்ல சாதுவா என்பதைத் தெரிந்துகொள்வதற்கு இது ஒரு நல்ல வழியாகும்.

பகவானின் சங்கல்பம் எதுவாக இருந்தாலும் அது நிறைவேறும். நம்மால் உணர முடிந்தாலும் சரி, உணர முடியாவிட்டாலும் சரி, சர்வ மங்கள வடிவமான பகவான் செய்வது எல்லாமே நன்மையே ஆகும். இதை நாம் அறிந்துகொண்டுவிட்டால், நமது ஆனந்தம் எல்லையற்றதாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

சாத்துவிக புத்தி தலையெடுத்தால், தீய உணர்ச்சிகளை உள்ளத்தில் புக விடாது. நல்லது கெட்டது என்று எது நடந்தாலும் சாத்துவிக புத்தி நன்மையைத் தவிர வேறு எதையுமே காணாது. அத்தகைய மனநிலை பகவானின் அசாதாரணமான கிருபையினால்தான் ஏற்படும். அந்த மனநிலை முழுமையாக அமையும்போது எல்லா விதமான துன்பங்களும் மறையும். பகவானின் கிருபைதான் எவ்வளவு ஆச்சரியமானது!

பகவானைப்பற்றிப் பேசும் அளவிற்கும் நினைக்கும் அளவிற்கும், அவற்றில் மகிழ்ச்சியை அடையும் அளவிற்கும், ஏற்ற வகையில் ஒருவனுக்கு நன்மையே அதிகரிக்கும். இந்த உலகிலேயே ஒரே ஒரு உண்மைப் பொருள் பகவான்தான்.— இந்த உண்மையை ஸ்ரீராமகிருஷ்ணர் எத்தனை எத்தனையோ முறை உபதேசித்திருக்கிறார்.

''நாம் கற்பனை செய்துகொள்ளும் சுகமும், அஞ்சி நடுங்கும் துன்பமும், உண்மையாகவே வரும்போது, நாம் நினைத்த அளவுக்கு இருப்பதில்லை. ஆனால் நடப்பதற்கு முன்னதாகவே எதிர்பார்க்கிற காரணத்தால் மனிதனின் உள்ளம் எப்போதும் ஓய்வில்லாமல் இருக்கிறது'' என்று ஒரு வங்காளக் கவிஞர் கூறுகிறார். அவர் சொன்னது மிக மிக உண்மையாகும். அனாவசியமாக விஷயங்களைப் பற்றிக் கவலைப்பட்டு நமது மனநிம்மதியை நாம் இழந்துகொண்டிருக்கிறோம். அப்படி இல்லாவிட்டால் ஒவ்வொன்றும் பொறுத்துக்கொள்ளக் கூடியதாகவே இருக்கிறது.

பாலத்தின் கீழே ஓடும் தண்ணீர் ஒரு பக்கம் புகுந்து மறுபக்கமாக வெளியேறிவிடுகிறது. அதைப் போலவே யாருடைய செல்வம் நல்ல வழியில் செலவு செய்யப்படுமோ அவர் பந்தத்திற்கு ஆளாக மாட்டார். அவர்கள் பணத்தை எப்போதும் கையாண்டுகொண்டிருந்தாலும்கூட ஜீவன்முக்தர்களைப் போல உலகில் வாழ்கிறார்கள். ஓர் அறையின் உள்ளே இருக்கும் காற்று, கதவைத் திறந்து வைக்கப்படும்போது கேடு அடைவதில்லை. அதைப் போல, உலக நன்மைக்காகச் செலவிடப்படும் பணம் அதற்கு உடையவரை அசுத்தமாக்காது என்று சுவாமி விவேகானந்தர் கூறுவது வழக்கம்.

பகவான் நம்மை எந்த நிலையில் வைத்திருக்க விரும்புகிறாரோ, அதுவே மிகச் சிறந்த நிலையாகும். அவர் ஒருவனுக்குத் தமது தாமரைத் திருவடிகளைப்

பற்றிய தியானத்தில் நிலையாக இருக்க இடம் கொடுப்பாரானால், அத்தகைய ஒருவன் எந்த நிலையில் இருந்தாலும், தீங்கு வராது. ஸ்ரீராம கிருஷ்ணர் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்த போதும், "நோயின் துன்பமும் உடலும் ஒன்றை யொன்று கவனித்துக் கொள்ளட்டும். ஆனால் மனமே, நீ எப்போதும் அம்பிகையின் தியானத்தில் மகிழ்ச்சியுடன் இரு" என்று கூறினார்.

உள்ளம் மகிழ்ச்சியுடன் இருந்தால், அதாவது பகவானிடம் நிலைத்திருந்தால், உடல் பலவிதத் துன்பங்களுக்கு உட்பட்டாலும் பாதகமில்லை. அந்தத் துன்பங்களால் என்ன செய்துவிட முடியும்? மனதின் துன்பங்கள்தாம் பயங்கரமானவை; பொறுத்துக்கொள்ள முடியாதவை. பகவான் உள்ளத்தைத் தமது திருவடித் தாமரையிலே பற்றுக் கொண்டு நிற்கும்படி அருள் புரிவாரானால், எந்த விதமான துன்பமும் துன்பமாகவே தோன்றாது.

"பாலையும் விற்க வேண்டும், பகவானையும் சந்திக்க வேண்டும்—இரண்டும் ஒரே வழியிலேயே நடக்க வேண்டும்" என்று ஸூர்தாஸ் குறிப்பிட்டிருக்கிறார். கோபிகைகள் பாலை விற்கப் போகும் பாவனையில் ஸ்ரீகிருஷ்ணனோடு கூடியிருப்பதற்காக விட்டை விட்டு வெளியேறுவது வழக்கம். ஆகவே இரண்டு காரியங்களும் ஒரே சாலையிலேயே நிறைவேறின. எப்படிப்பட்ட அழகான கருத்து! செய்யும் எல்லா விதமான காரியங்களும் பகவானுக்காக. எதற்கும் முன்னால் பகவான்; மற்றவை எல்லாமே அவருக்குப் பிறகுதான். பகவானை விட்டு ஒருசிறிதும் விலகாத பக்திக்கு, கோபிகைகளைப் போல வேறு உதாரணம் கிடையாது. பகவானின் திருவருளைப் பெற்றுவிட்டால், வேறு எதற்குமே குறை இருக்காது.

விட்டில் இருந்தாலும் சரி, காட்டில் இருந்தாலும் சரி, தன்னை ஒருவன் முழு அளவில் கடவுளிடம் ஈடுபடுத்த வேண்டும். உலக வாழ்க்கையைத் துறந்து காட்டுக்கே சென்றாலும், ஆண்டவனைக் காணவிட்டால் அதனால் ஏற்படும் நன்மை என்ன? உனது உள்ளத்தை நீ இறைவனிடம் செலுத்துவாயானால், நீ எங்கிருந்தால்தான் என்ன? நீ பயப்பட வேண்டியதில்லை பகவானைக் கண்டுபிடித்தே ஆகவேண்டும். அவரையே எழும்போதும் உட்காரும்போதும் சாப்பிடும்போதும் படுத்திருக்கும் போதும் நினைவில் இருத்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பகவானிடம் ஈடுபாடு கொண்டவனுக்கு, அச்சமோ கவலையோ கொள்ள வேண்டிய தேவையே இல்லை. பகவான் கீதையிலே அர்ஜுனனுக்கு இதையே எடுத்துச் சொன்னார்: "என்னுடைய பக்தன் நாசமடைய மாட்டான் என்று உண்மையில் உணர்ந்து உலகிற்கு உரைப்பாய்." —கீதை 9 - 31.

தேவர்களுக்குள்ளும் தூய பக்தியைப் பெற்றவர்கள் அரியவர். பகவானையும் கட்டிப் பிடித்து வைக்கக்கூடியது சுத்த பக்தி. அத்தகைய உயர்ந்த பக்தியைப் பெறுவது எளிதா? இராம்பிரசாத், 'பக்தியே எல்லாவற்றிற்கும் மூலம்; முக்தி அதனுடைய வேலைக்காரி' என்று சொல்கிறார். பகவானிடம் பக்தி எழுந்தபிறகு, இந்த உலகில் பெற வேண்டியது என்று வேறு எதுவுமே இல்லை.

---

## நாகரிகம்

சுவாமி விவேகானந்தர் வெறும் சால்வையைப் போர்த்துக் கொண்டு, கைத்தடியுடன் நியூயார்க் நகர விதியில் நடந்து போய்க் கொண்டிருந்தார். எதிரே ஒரு வெள்ளை மாது அவரைப் பார்த்து நகைத்துக் கேலியாகப் பேசிவிட்டார்.

விவேகானந்தர் புன்சிரிப்புடன், "அம்மணி, எங்கள் நாட்டில் நாகரிகமோ, மனித மதிப்போ ஆடையணிகளில் அடங்கியில்லை. நன்னடத்தையில்தான் அடங்கியிருக்கிறது" என்று சொல்லி விட்டுச் சென்றார்.



'ஞானோதய்', கல்கத்தா.



# புவனேசுவரம்

சுவாமி கமலாத்மானந்தர்

தீபாவளி வருவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே 'தீபாவளி வரப்போகிறது; தீபாவளி வரப் போகிறது' என்று குழந்தைகள் குதூகலத்துடன் சொல்லிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் அப்படி ஆவலோடு எதிர்பார்த்த தீபாவளி உண்மையிலேயே திடுமென்று ஒரு நாள் வந்து மறைந்துவிடும்.

அதுபோல் 'சன்னியாசம் பெற 1979 பிப்ரவரி மாதத்தில் பேலூர் மடம் செல்வதாக இருக்கிறேன்' என்று கடந்த ஒரு வருடமாக நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். எனக்கு அறிமுகமானவர் களும், 'எப்போது பேலூர் மடம் போகப்போகி றீர்கள்?' என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்படிச் சொல்லிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இருந்த பிப்ரவரி 1979 வரவே செய்தது.

15-2-79 இரவு மடத்தைச் சேர்ந்த அன்பர்கள் சிலர் சென்ட்ரல் ஸ்டேஷனில் என்னை வழியனுப்பி வைத்தனர். இரவு 10-45 மணிக்கு ஹவ்ரா மெயில் புறப்பட்டது.

ஓர் இரவு ஒரு பகல் பிரயாணத்திற்குப் பிறகு ரெயில் புவனேசுவரத்தை அடையும். பிப்ரவரி 23 ஆம் நாள் நான் பேலூர் மடத்தில் இருக்க வேண்டும். வழியில் புவனேசுவரம், புரி ஜகந்நாதம் ஆகிய இடங்களுக்குச் சென்றுவிட்டு 23ஆம் நாள் பேலூர் மடம் செல்வதாக இருந்தேன். சன்னியாசம் பெறுவதற்காகச் செல்கிறோம் என்ற எண்ணம் காரணமாக ஆன்மிக வாழ்க்கையைப் பற்றிய பல சிந்தனைகள் உள்ளத்தில் அலைமோதியபடி இருந்தன.

புவனேசுவரத்தை அடைவதற்கு முன்பு 16-2-79 இரவு 8-45க்கு, குர்தாரோடு ஸ்டேஷனில் ரெயில் நின்றது. அங்கே பிளாட்பாரத்திலிருந்த புத்தகக் கடையில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் வெளியீடுகள் பல ஆங்கிலத்திலும் ஒரியா மொழியிலும் வைக்கப் பட்டிருந்தன. சென்னை மடத்தின் ஆங்கில நூல்கள் பலவற்றை அங்குப் பார்த்தபோது எனக்குப் பெரிதும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

அடுத்த ஒரு மணி நேரத்தில் ரெயில் புவனேசு வரத்தை அடைந்தது.

1974 ஆம் ஆண்டு மார்ச் இறுதியில் பேலூர் மடத் திற்குச் சென்றபோது புவனேசுவரம், புரி ஆகிய இடங்களைத் தரிசித்திருந்தேன். இப்போது இரண் டாம் முறையாகப் புவனேசுவாம் வந்திருக்கிறேன்.

இரவு 10-15க்குப் புவனேசுவரத்திலுள்ள ஸ்ரீராம கிருஷ்ண மடத்தை அடைந்தேன். மடத்தில் சரோஜ் மகராஜ், சுனில் மகராஜ் ஆகியோர் அன் புடன் வரவேற்றனர். இரவு உணவுக்குப் பிறகு உறங்கச் சென்றேன்.

அதிகாலையில் மடத்தின் பூஜையறையில் தியா னம் செய்துவிட்டு, சுவாமி பிரம்மானந்தரின் அறைக்குச் சென்றேன்.

புவனேசுவரத்திலுள்ள மடம் சுவாமி பிரம்மானந்த ரால் உருவாக்கப்பட்டது. பிரம்மானந்தரின் மடம் என்றே அதைச் சொல்லலாம்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் ஸ்தூல மறைவிற் குப் பிறகு ஸ்ரீ மகராஜ் (சுவாமி பிரம்மானத்தர்) தீர்த்த யாத்திரையாகப் புவனேசுவரம் வந்திருந்தார். அப் போதே அவருக்கு, இப்போது மடம் அமைந்துள்ள இடத்தில் ஒரு மடம் அமைய வேண்டும் என்ற என் ணம் எழுந்தது. அவரது எண்ணம் பிற்காலத்தில்

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பேலூரில் தோற்றுவிக்கப் பட்ட பிறகு நிறைவேறவே செய்தது.

ஸ்ரீ மகராஜ் புவனேசுவரத்திற்கு வந்திருந்தபோது அந்தப் பகுதிகளில் அடர்ந்த காடுகள் இருந்தன ஏன், இப்போதுங்கூடப் புவனேசுவரத்தின் எல்லைப் புறங்களில் புதர்கள் மண்டிக் கிடக்கின்றன.

'ஒரு பன்றியின் பொருட்டுச் சிவபெருமானும் அர்ஜுனனும் சண்டையிட்டதாகப் புராண வரலாறு உண்டு. அந்தச் சண்டையின் முடிவில் சிவபெருமான் அர்ஜுனனுக்குத் தரிசனம் கொடுத்தாராம். அந்த நிகழ்ச்சி நடைபெற்ற இடத்தில்தான் தற்போது புவனேசுவரத்திலுள்ள 'ஸ்ரீராமகிருஷ்ண மடம் அமைந்திருக்கிறது என்று உள்ளூர்வாசிகள் கூறுகிறார்கள்.

புவனேசுவரம் மடத்தில் ஸ்ரீ மகராஜ் நீண்டகாலம் தங்கியிருந்திருக்கிறார். வங்க மொழியில் எழுதப் பட்டுள்ள ஸ்ரீ மகராஜின் வாழ்க்கை வரலாற்றில் 'புவனேசுவரத்தில் சுவாமி பிரம்மானந்தர்' என்று ஓர் அத்தியாயமே இருக்கிறது.

புவனேசுவரம் மடத்தில் ஸ்ரீ மகராஜ் தங்கியிருந்த போது 'குருதேவர் வாக்கியம்' என்னும் நூலைத் தொகுத்தார். அப்போது ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணரே தரிசனம் தந்து, குறிப்பிட்ட ஓர் உபதேசம் சற்றுப் பிழைபட எழுதப்பட்டிருப்பதாகவும் இன்ன விதத்தில்தான் அந்த உபதேசம் அமைந்திருக்க வேண்டும் என்று கூறியதாகவும் அதன்படியே அந்த உபதேசம் திருத்தி எழுதப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

பிற்காலத்தில் புவனேசுவரம் மடத்தில் ஸ்ரீ மகராஜ் மிக உயர்ந்த ஆன்மிக நிலைகளில் இருந்திருக்கிறார். அவர் ஒரு ஞானக் காட்சியில் (vision), தற்போது மடம் உள்ள இடத்தில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு சுமார் 2000 சமண மதத் துறவியர் ஒரு பெரிய மடம் அமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்ததைக் கண்டார் என்று சாது ஒருவர் எப்போதோ சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இதுபோன்று பல தெய்விகப் பின்னணிகள் இருந்ததால்தான் ஸ்ரீ மகராஜ் அங்கு மடம் அமைக்க விரும்பினார் போலும்!

ஸ்ரீ மகராஜ் புவனேசுவரம் மடத்தில் தங்கியிருந்த அறையை அப்படியே ஒரு கோயில் போல வைத்திருக்கிறார்கள். அங்கு அவர் பயன்படுத்திய கட்டில், சாய்வு நாற்காலி, மற்றும் சில பொருள்கள் உள்ளன.

காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு மடத்திலுள்ள ஹாலில் சாதுக்களுடன் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது சுனில் மகராஜ், "இந்த ஹாலில்தான் ஸ்ரீ மகராஜ், பிரபு (தற்போது ஜெனரல் பிரசிடெண்டாக உள்ள ஸ்ரீமத் சுவாமி வீரேசுவரானந்தஜி) மகராஜுக்குச் சன்னியாசம் கொடுத்தார்" என்று தெரிவித்தார்.

சுனில் மகராஜ் தற்போது புவனேசுவரம் மடத்தின் தலைவராக இருக்கிறார். சென்னை மடத்தில் சுமார் பன்னிரண்டு ஆண்டுகள் இருந்ததால் ஒரு சிறிது தமிழ் பேசுவார். ஏறத்தாழ, சென்னை மடத்துடன் தொடர்பு கொண்டுள்ள எல்லாப் பக்தர்களையும் சாதுக்களையும் பற்றி அவர் விவரமாக விசாரித்தார்.

சரோஜ் மகராஜ் முன்பு கல்கத்தாவிலுள்ள அத்வைத ஆசிரமத்தில் இருந்தார். பேலூர் மடத்தில் இரண்டாண்டுகள் நான் இருந்தபோது அடிக்கடி அவர் அங்கு வருவது வழக்கம்

"பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா என்று ஒருவர் இந்த வாரத்தில் புவனேசுவரம் வருவதாக இருக்கிறார் என்று சுனில் மகராஜ் சொல்லிக்கொண்டிருந்தார். நான் யாரோ வருகிறார் என்று இருந்தேன். கடைசியில் பார்த்தால் தயாள் வந்து நிற்கிறார்' என்றார் சரோஜ் மகராஜ்.

ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தஜி மகராஜ் சென்னை மடத்தில் இருந்தபோது, 1968-ஆம் ஆண்டில் மகராஜும் நானும் சென்னை மடத்தில் பிரம்மசாரியாகச் சேர்ந்தோம். புவனேசுவரம் மடத்தில் சில ஆண்டுகளாக இருந்து வரும் அவர் சென்னை மடத்தைப் பற்றி விசாரித்தார். இருவரும் ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தஜி மகராஜ் அவர்களைப் பற்றிய பழைய நினைவுகளைப் பரிமாறிக்கொண்டோம்.

பிறகு சரோஜ் மகராஜ் மடத்தின் சார்பாக நடத்தப்படும் மருத்துவமனை, உயர்நிலைப்பள்ளி ஆகிய இடங்களுக்கு என்னை அழைத்துச் சென்று சுற்றிக் காட்டினார்.

17-ஆம் தேதி காலை 10 மணிக்கு லிங்கராஜ் கோயிலுக்கு, பிரவீண் மகராஜ் என்னை அழைத்துச் சென்றார். புவனேசுவரத்திலுள்ள புகழ் பெற்ற சிவன் கோவில் அது.

ஸ்ரீராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த சாதுக்களுக்காகவும் பக்தர்களுக்காகவும் லிங்கராஜ் கோவிலில் பண்டா ஒருவர் உண்டு. நாங்கள் சென்ற போது கோவிலில் அவர் இல்லை. ஆகவே கோவிலுக்கு அருகிலுள்ள கடைகளில் பூஜைக்கு உரிய பூ, பழம் ஆகியவற்றுடன் பண்டா ஒருவரின் துணையுடன் கர்ப்பக்கிருகத்திற்குச் சென்றோம். தென்னிந்தியாவிலுள்ள கோயில்களைப் போல இல்லாமல் வடநாட்டிலுள்ள பல கோயில்களிலும் கர்ப்பக் கிருகத்திலுள்ள சுவாமியைத் தொட்டுப் பூஜை செய்ய அனுமதிப்பார்கள். லிங்கராஜ் கோயிலிலுள்ள பெரிய சிவலிங்கத்தை ஸ்பரிசித்த நிலையில், பண்டா சொன்ன சுலோகங்களை நாங்களும் திருப்பிச் சொல்ல, பூஜை ஒருவாறு முடிந்தது. சீதளாதேவி, புவனேசுவரிதேவி, விநாயகப்பெருமான் ஆகியோருக்கும் அங்கே சந்நிதிகள் உள்ளன. விநாயகப் பெருமான் நின்ற நிலையிலுள்ள திருக்கோலம் உள்ளத்தைப் பரவசப்படுத்துவதாக அமைந்துள்ளது. பெரிய இந்த விநாயகரின் திருவுருவத்தின் முன்னால் தியானம் செய்வதற்கு ஏற்ற இடவசதியும் உள்ளது. இந்த இடத்தில் சுவாமி பரமானந்தர் அடிக்கடி வந்து தியானத்தில் அமர்வது வழக்கம்.

கோயிலையொட்டி, 'பிந்து சாகர்' என்ற பெரிய குளம் இருக்கிறது. லிங்கராஜ் கோயிலைச் சேர்ந்த அந்தக் குளத்தின் வழியாக மடத்திற்குத் திரும்பினோம்.

புவனேசுவரம் மடத்தின் சார்பாக ஒரியா மொழியில் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த நூல்கள், மற்றும் பக்தி, வேதாந்தம் பற்றிய நூல்களும் வெளியிடப்படுகின்றன. அவற்றுடன் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் வங்க, ஆங்கில மொழி நூல்களும் மடத்தில் விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன.

அன்று மாலை புவனேசுவரத்திலுள்ள புத்தர் நினைவு மண்டபம், ஜைன மதத்தைச் சேர்ந்த துறவியர் வாழ்ந்த இடம் ஆகியவற்றைப் பார்ப்பதற்கு என்னை மடத்திலிருந்து பிரம்மசாரி ஒருவர் அழைத்துச் செல்வதாக இருந்தார். ஆனால் புரியிலிருந்து ஒரு நாள் டூரிஸ்ட் பஸ்ஸில் சுற்றுப்புற இடங்களுக்குச் செல்லும் யோசனை எனக்கு இருந்ததாலும் அந்த இடங்கள் மடத்திலிருந்து நீண்ட தொலைவில் இருந்ததாலும் அன்றைய தினம் நான் அந்த இடங்களுக்குச் செல்லவில்லை.

அன்று மாலை மடத்தின் சார்பாக நடத்தப்படும் நூல்நிலையத்திற்குச் சென்று வந்தேன். அன்று மாலை மடத்தில் நடைபெற்ற ஆரதியிலும் கலந்துகொள்ள முடிந்தது.

புவனேசுவரம் ஒரிசாவின் தலைநகரமாக இருந்தாலும் மடம் அமைந்துள்ள பகுதியில் ஆரவாரம் மிகவும் குறைவு. சுமார் பதினைந்து ஏக்கர் நிலத்தின் மத்தியில் அமைந்துள்ள மடத்தில் மாலையில் இருள் சூழ்ந்ததும் கிராமத்தில் இருப்பதைப் போன்ற ஆழ்ந்த அமைதியே நிலவுகிறது. மடம் அமைந்துள்ள 'விவேகானந்த மார்க்' என்னும் சாலையில் செல்லும் மோட்டார் வண்டிகளின் சப்தம் எப்போதாவது காதில் விழும்போதுதான் 'நகரத்தில்தான் இருக்கிறோம்' என்ற நினைவு வருகிறது.

இரவு சரோஜ் மகராஜ் ஒரியா மொழி நாளிதழ் ஒன்றைக் கொண்டு வந்து காட்டினார். அந்தப் பத்திரிகையில் சமீபத்தில் சென்னை மடத்திலிருந்து சுவாமி தபஸ்யானந்தஜி புவனேசுவரம் வருகை தந்தது, புவனேசுவரம் மடத்தில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம், சொற்பொழிவு நிகழ்த்தும் நிலையில் அங்கு எடுக்கப்பட்ட அவரது புகைப்படம் ஆகியவை வெளியாகியிருந்தன.

மறுநாள் (18—2—79) காலையில் மடத்திற்கு அருகிலுள்ள ராஜாராணி கோயிலுக்குப் பிரம்மசாரி கார்த்திக் என்னை அழைத்துச் சென்றார்.

அன்று மாலை மடத்துப் பக்தர் ஒருவர் கட்டக் நகரில் உள்ள காளி கோயிலுக்குத் தமது காரில் அழைத்துச் சென்றார். அவருடன் திரும்பவும் புவனேசுவரம் வந்து சேர இரவு மணி ஒன்பது ஆகிவிட்டது.

வீட்டில் கிணற்றில் 'எலி விழுந்துவிட்டது; பூனை விழுந்துவிட்டது' என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். புவனேசுவரத்தில் மடம் ஆரம்பிக்கப்பட்ட ஆரம்ப காலத்தில் மடத்திலுள்ள கிணற்றில் ஒரு நாள் இரவு கரடி விழுந்துவிட்டதாம். சுவாமி அசோகானந்தர் தமது கட்டுரையில், சுவாமி பிரம்மானந்தர் மாலையில் உலாவச் சென்றபோது தம்மையும் உடன் அழைத்துச் சென்றதையும், அப்போது வழியில் புலி ஒன்று எதிர்ப்பட்டதையும் குறிப்பிட்டிருக்கிறார். இந்த நிகழ்ச்சிகளின்மூலம் புவனேசுவரத்திலுள்ள மடம் எத்தகைய சூழ்நிலைகளுக்கிடையில் அந்தக் காலத்தில் துவக்கப்பட்டிருக்கிறது என்பதை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்.

[தொடரும்]

# சும்மா இருக்கும் திறமரிது

பேராசிரியர் : டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் : 'சமய ஜோதி', மதுரை

உலகில் எத்தனையோ அரும் பெருங் காரியங்களைப் பயிற்சியினால் எளிதில் சாதித்துவிடலாம். பிராணாயாமப் பயிற்சி மூலம் நீர்மேல் மிதக்க முடியும். கரடி, புலி போன்ற மிருகங்களின் வாயைக் கூடக் கட்டிவிட முடியும். யோகப் பயிற்சிகளால் அணிமா, மகிமா, கரிமா, லகிமா அதாவது உருச் சிறுத்தல், உருப் பெருத்தல், மிகுந்த எடையுடன் விளங்குதல், பறவையின் இறகு போன்று எடை மிகவும் குறைந்து விளங்குதல் போன்ற பலவேறு சித்திகளை ஒருவன் பெற்று விளங்க முடியும். ஒரே சமயத்தில் பலவேறு இடங்களில் ஒருவனால் தோன்ற முடியும். வெறும் கையிலிருந்து விபூதி, குங்குமம் போன்ற பொருள்களை உண்டாக்கிக் காட்ட முடியும். இவை போன்ற எண்ணற்ற சித்திகளை உலகோர் வியக்கும் வண்ணம் செய்து காட்ட வல்லவர் இன்றும் நம்மிடையே பலர் இருக்கின்றனர். ஆனால் அத்தகையவர்களாலும் எளிதில் செய்ய முடியாத அரிய செயலொன்று உண்டு. அதுதான் சிந்தையை அடக்கிச் சும்மா இருத்தல் ஆகும்,

சும்மா இருப்பது எவ்வளவு கடினம் என்பதைத் தெரிந்துகொள்ள நாம் பெரிய ஆராய்ச்சி ஏதும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. கொஞ்ச நேரம் கால்களை மடக்கிக் கைகளைக் கட்டிக் கண்களை மூடி நிமிர்ந்து உட்கார நாம் முயல்வோமானால் அதற்கு எத்தனை இடையூறுகள் எதிர்ப்படும் தெரியுமா? அந்த வேளையில்தான் எறும்பு ஒன்று முதுகில் ஊர்வது போன்ற உணர்ச்சி ஏற்படும். கொசு ஒன்று மூக்கினுள் நுழைய முயலும். உடனே அதை விரட்டக் கைகள் தாமே வேலை செய்யத் தலைப்படும். சாதாரணமாகக் கைகால் போன்ற உடல் அவயவங்களை நம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதே இவ்வளவு கடினம் என்னும்போது, இந்தப் புற உறுப்புக்களை எல்லாம் தன் வசத்தில் வைத்திருக்கும் மனத்தை அடக்குதல் எவ்வளவு அரிய செயல் என்பது சொல்லியா தெரிய வேண்டும் ?

இயற்கை சூனியத்தை அதாவது வெற்றிடத்தை வெறுக்கிறது என்பது பௌதிக விஞ்ஞானக் கோட்பாடு ஆகும். ஓர் இடத்திலிருந்து காற்றை வெளியேற்றினால் அந்தக் காலியான இடத்தை நோக்கி வேறோர் இடத்திலிருந்து காற்று வீசி அதை நிரப்பிவிடுகிறது. எந்த இடத்தையும் காலியாக விட்டு வைக்க இயற்கை விரும்புவதில்லை. அதுபோலவே மனதிலிருந்து ஓர் எண்ணத்தை வெளியேற்றினால் உடனே மற்றோர் எண்ணம் அங்கே தோன்றிவிடுகிறது. சமுத்திரத்தில் ஓர் அலைக்குப் பின் மற்றோர் அலை தொடர்ந்து உருவாகிக்கொண்டிருப்பது போன்று மனமெனும் கடலில் எண்ணங்கள் தொடர்ந்து தோன்றிக்கொண்டே இருக்கின்றன. மனத்தில் எண்ணம் எப்படி எழுகிறது என்பதைச் சற்றே ஆராய்வோம். அதற்குக் கடலில் அலை எவ்வாறு உண்டாகிறது என்பதைப் பற்றி முதலில் கொஞ்சம் தெரிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. சில வேளைகளில் கடற்கரையில் நின்று கடலைப் பார்த்தால், வரைந்த சித்திரத்தைப் போன்று அது அமைதியாயிருப்பதைக் காணலாம். அலை வீசிய கடல் அப்பொழுது ஓய்ந்து ஒடுங்கிக் காணப்படுகிறது. சற்று முன்பு வரை அலைவீசிய கடல் தற்பொழுது அமைதியாகக் காணப்படுவானேன்? காற்று கொஞ்சமும் வீசாதபோதுதான் கடல் அமைதியுற்றிருக்கும். காற்று அதிகம் வீச வீசக் கடலில் அலைவீச்சும் அதிகரிக்கும். புயற்காற்று அடிக்கையில் எழும் பயங்கர அலைகளில் சிக்குண்டு சில சமயங்களில் பெருங் கப்பல்கள் கடலில் ஆழ்ந்து போவதுண்டு.

மனமாகிய கடலில் ஆசையாகிய காற்று வீசுகையில் எண்ணம் எனும் அலைகள் கிளம்புகின்றன. ஆசையின் வேகம் கூடக் கூட எண்ணங்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கிறது. புயல்வடிவில் சில சமயங்களில் ஆசைக்காற்று பயங்கரமாக வீசுகையில் அதில் அகப்பட்டுச் சிக்குண்டு ஒருவன் தன்னையே இழந்துவிடும் பரிதாப நிலையும் ஏற்பட்டுவிடுகிறது. ஆசைகள் அடங்க அடங்க, மனதில் உதிக்கும் எண்ணங்களும் குறைகின்றன. அறவே ஆசையற்ற நிலையில் எண்ணமே இருக்க வழி இல்லை. அந்த நிலைதான் சும்மா இருக்கும் பெரு நிலையாகும்.

சும்மா இருக்கும் நிலையே பெருநிலை என்பதுதான் சான்றோர்களின் கருத்து. அவர்களது கருத்துப்படி மனதில் எந்தவிதமான ஆசைக்கும் இடம் தராமல் எண்ணமற்ற நிச்சல நிலையில் இருப்பதுதான் பெறற்கரிய பெருநிலையாகும். ஆசைக்கோர்

அளவில்லை என்பதே யதார்த்த நிலையாகும். தீயி னில் நெய்யை வார்த்துத் தீயை அணைக்க முடியாது என்பது போல் ஆசைகளை அடக்க முடியாது. ஆசையற்ற நிலையே ஆனந்த நிலை என்பதுதான் புத்தர் போன்ற மாமுனிவர்கள் தங்களது தவ வாழ்வின் மூலம் கண்ட முடிவாகும். அந்த ஆசை யற்ற நிலையை அடைவதுதான் மனித வாழ்வின் இலட்சியமாகும்.

உலக வாழ்வில் சிக்கிக்கொண்டிருப்பதற்கிடை யில் ஆசையற்று வாழ்வது எங்ஙனம் சாத்தியம் என்ற ஐயம் மனதில் எழக்கூடும். ஆசையற்று வாழ்தல் எடுத்த எடுப்பில் முடியாது. எனினும் ஆசைகளைப் படிப்படியாகக் குறைத்து வாழ்வதை நாம் சாத்தியப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆசை குறையக் குறைய மனதில் நாம் இதுவரை அனுபவித்திராத ஒருவித ஆனந்தமும் மகிழ்ச்சி யும் கூடவே தோன்றுவதை நாம் காணலாம். ஆசையும் ஆனந்தமும் எதிரிடைத் தொடர்பு உடையவை ஆகும். ஆசை கூடக் கூட உண்மை யான ஆனந்தம் குறையும். பகவத்கீதையில் காண்பது போல், ஒருவனது அழிவிற்குக் காரணம் அவனது ஆசைகளேயாகும். ''ஒருவனது மனதில் ஓர் ஆசை உண்டாகிறது. அது பூர்த்தியடையாத நிலையில் சினம் தோன்றுகிறது. சினத்தின் விளைவாக மதிமயக்கமும், மதிமயக்கத்தினால் மனக்குழப்பமும் ஏற்படுகின்றன. மனக்குழப்பத்தால் புத்திநாசம். புத்திநாசத்தால் அழிவே ஏற்படுகிறது'' என்று படிப்படியாக ஆசை எவ்விதம் மனிதனை மாய்த்து விடுகிறது என்பதைக் கிருஷ்ண பகவான் அழகாக எடுத்துரைக்கிறார்.

ஆசைகளை வென்றுவிட்ட பின்னரும் சிறிது காலத்திற்குப் பழைய வாசனைகள் நமது முயற்சி யின்றி நம் மனதில் தாமே தோன்றிக்கொண்டிருக் கும். அவற்றிற்கு விகல்பங்கள் என்று பெயர். ஆசைகளுக்குச் சங்கல்பங்கள் என்று பெயர். சில காலப் பயிற்சிகளுக்குப் பிறகு விகல்பங்களும் இல்லாமல் மறைந்துவிடும். அந்த நிலைதான், அதா வது சங்கல்ப விகல்பமற்ற பெருநிலைதான் நிர் விகல்ப சமாதி நிலை எனப்படுகிறது. அந்த நிலையில் தெய்வ சாந்நித்தியமும் ஒன்றுதான். ஆசைகளை வென்றவர், அதாவது எந்தவித ஆசையும் அற்ற வர் 'புத்தர்' ஆகிவிடுகிறார். அந்தப் புத்தநிலைதான் நிர்வாணப் பெருநிலையாகும். அதுதான் வாழ்வில் மனிதன் அடைய வேண்டிய இலட்சியமாகும்.

ஆசையற்றிருப்பது சாதாரண மக்களுக்கு இய லாத காரியம் என்பதை அறிந்த சான்றோர், ''ஆசையற்று வாழ உன்னால் முடியவில்லை என்றால் நீ ஆசையுடன் வாழ்; குற்றமில்லை. ஆனால் உலக ஆசையை விட்டு இறைவனைப் பற்றிய ஆசையுடன் வாழ்வாயாக. அது உன்னைக் கடைத்தேற்றும்'' என்று சொல்லிப் போந்தனர். இதைக் கருத்தில் கொண்டுதான் திருவள்ளுவரும்,

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

என்று கூறியிருக்கிறார்.

எனவே சிந்தனைகளற்றுச் சும்மா இருக்கும் பெருநிலையை அடைய நாம் வேட்கை கொள்வோ மாக. அதற்கு முதற்படியாக உலகப் பந்தங்களில் நம்மைப் பிணைக்கும் லௌகிக ஆசைகளைப் படிப்படியாகக் குறைத்துப் பாரமார்த்திக விஷயங் களில் பற்றினைக் கூட்ட முயற்சிகளை மேற்கொள் ளல் அவசியம். இறையருளால் நம் வாழ்வில் உண்மையான அமைதியும் ஆனந்தமும் ஓங் கட்டும். *

---



# ஸ்ரீராமநவரத்ன மாலிகா

கோகில கவி இயற்றியது

1. ராமநாமம் பாவம் என்னும் காட்டை எரிக்கிறது
ராமநாமம் சம்சார சங்கடத்தை நீக்குகிறது
ராமநாமம் எல்லாரையும் காப்பாற்றுகிறது
ராமநாமம் உண்மையைக் காட்டும் தீப ஒளி போன்றது.

2. ராமநாமம் பாவிகளைக் கடைத்தேற்றுகிறது
ராமநாமம் உலக பந்தத்தை நீக்குகிறது
ராமநாமம் பாதகம் எதையும் செய்யாது
ராமநாமம் மங்களத்தைக் கொடுக்க வல்லது.

# முக்தியின் சாதனைகள்

சுவாமி அமரானந்தர்

முக்தி அதாவது விடுதலையை விரும்பாதவர் யாருமில்லை. எல்லா ஜீவர்களும் விடுதலையை விரும்பியே வாழ்ந்துகொண்டிருக்கின்றனர். வாழ்க்கையின் ஒரு நிலையிலிருந்து விடுதலையடைந்து மற்றொன்றில் பந்தப்படுவது அனுபவமாக இருக்கிறது. தாயின் கருப்பையில் பந்தப்பட்டு வளர்ந்த சிசு, பத்து மாதத்தில் அதை விட்டு வெளியே வந்து, அதிலிருந்து விடுதலை அடைகிறது. அவ்விதம் விடுதலை அடையாவிட்டால் தாய்க்கும் கேடு சேய்க்கும் கேடு ஆகும். விடுதலையடைவது வாழ்க்கையில் நடைமுறையாகவும் அமைந்திருக்கிறது. கருப்பையிலிருந்து வெளிவந்த குழந்தை மூன்று நான்கு ஆண்டுகள் வரை தாயின் அணைப்பில் வளருகிறான். பின்பு அதை விட்டுத் தெருவுக்கு விளையாட வருகிறான். விளையாட்டிலிருந்து விடுதலையடைந்து பள்ளியில் பந்திக்கப்படுகிறான். பள்ளியிலிருந்து வெளியேறி, வேலையில் அமர்ந்து குடும்ப வாழ்க்கையில் கட்டுப்படுகிறான். இறுதியாக மரணத்தின்மூலம் இந்தப் பிறவியிலிருந்து விடுபட்டு, மறுபிறவியில் பந்தப்படுகிறான். இவ்விதம் ஜீவாத்மாவின் வாழ்க்கைச் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கிறது. இவ்விதம் சுழன்று கொண்டிருப்பதையே சம்சார சாகரம் என்று சான்றோர் கூறுகின்றனர்.

இந்தச் சுழற்சியிலிருந்து விடுபடுவதையே இறைவனடி சேருதல் அல்லது முக்தி என்று மேலோர் கூறுகின்றனர்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்'

என்பது மறைமொழி. ஜீவன் முக்தியடையும்போது இப்படிப் பிறந்து இறந்து சுழன்றுகொண்டிருக்கும் சுழற்சியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறான். சாதனை இல்லாமல் எந்தக் காரியமும் சாதிக்கப்படுவதில்லை. உயர்ந்த உத்தியோகம் வேண்டுபவன் கல்லூரியில் புகுந்து கற்றல் என்ற சாதனை செய்தாக வேண்டும். அது போலவே இந்த உலக வாழ்க்கையிலிருந்து விடுபடுவதற்கும் சாதனை செய்தாக வேண்டும். அதற்கு உரிய சாதனைகளையும் சான்றோர் வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். அந்தச் சாதனைகளை நான்கு வகையாகப் பிரித்து, 'கைவல்ய நவநீதம்' என்னும் நூல் பின்வருமாறு கூறுகிறது—

**நித்திய அநித்தியங்கள் நிண்ணயம் தெரிவிவேகம்**
**மத்திய இக பரங்கள் வரும் போகங்களில் நிராசை**
**சத்தியம் உரைக்க வேண்டும் சமாதி என்று ஆறு கூட்டம்,**
**முத்தியை விரும்புர் இச்சை மொழிவர் சாதனம் இந்**
**நான்கே.**

[நித்தியம்—சாச்வதமானது; நிண்ணயம்—நிர்ணயம்; மத்திய—இடையிலுள்ள; இகம் இந்த உலக வாழ்க்கை; பரங்கள்—பரலோக வாழ்க்கை, சுவர்க்கம்; சமாதி—சமம் என்ற சொல்லை முதலாகக் கொண்டது.]

1. நித்ய அநித்ய வஸ்து விவேகம், 2. தனக்கும் பரம்பொருளுக்கும் இடையிலுள்ள இகலோக பரலோக அதாவது இந்த உலகம் சுவர்க்க உலகம் ஆகியவற்றில் உள்ள போகப் பொருள்களில் ஆசையின்றி இருத்தல், 3. சமம் என்னும் சொல்லை முதலாகக் கொண்ட சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்ற ஆறு சாதனைகள், 4. தீவிரமாக முக்தியை அடைய விரும்பும் முமுட்சுத்வம் ஆகிய இவை நான்கும் ஜீவாத்மா கையாள வேண்டிய உண்மையான சாதனங்கள் ஆகும். உண்மை பேசுவதை ஐந்தாவதாக ஒரு முக்கியச் சாதனையாகவும் எடுத்துக்கொள்ளலாம்.

மேலும் சற்று விளக்கம் காணலாம்: சாதனையின்றி எந்தக் காரியமும் சாதிக்கப்படுவதில்லை என்று சொல்லப்பட்டது. புல் முதல் பிரம்மா வரையில் உள்ள எல்லா உயிர்களும் ஜீவாத்மாக்கள் ஆகின்றன. சிருஷ்டி முழுவதும் பிரம்மா ஆகிறது. தோற்றத்தில் உள்ள அனைத்தும், தனக்கும் பரமாத்மாவுக்கும் இடையில் உள்ள இகம் பரம் ஆகிய உலகங்களிலுள்ள போக போக்கியங்களில் அதாவது இந்திரிய சுகங்களில் ஆசை வைத்து, ஓரளவு அனுபவித்து அல்லற்படுகின்றன. பரலோகம்

என்பது, இந்திரன் முதலான தேவர்கள் அனுபவிக்கும் சுவர்க்கலோகம் என இங்குப் பொருளாகும். எல்லா உயிர்களும் அல்லல் இல்லாத முற்றும் விடுபட்ட நிலையான முக்தியை நாடி முயன்று யாத்திரை செய்துகொண்டிருக்கின்றன. பிரம்மாவுக்கும் கிரம முக்தி உண்டு. ஒரு தடவை சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் பிரளயத்தில் மறைந்து போகும்போது பிரம்மாவும் முக்தியடைத்துவிடுகிறார். சிருஷ்டி அதாவது பிறவித் தளையிலிருந்து விடுபட்டு முக்தி அதாவது விடுபேறு அடைய வேண்டிய சாதனம் நான்கு வகைகளாகப் பகுத்துக் காட்டப்படுகின்றன. அவை சாதன சதுஷ்டயம் என்று பெயர் பெறுகின்றன.

அவையாவன—

1. **நித்ய அநித்ய வஸ்து விவேகம் :** நித்திய அநித்தியங்கள் நிர்ணயம் தெரி விவேகம். அதாவது நிலைபேறுடையது எது, நிலையாமை எது என்று பாகுபடுத்தி அறிந்துகொள்ளும் அறிவு. நீர் மேல் குமிழி போல் இந்த உலகம் நிலையற்றதாக இருக்கிறது. கணந்தோறும் மாறிக்கொண்டிருக்கும் ஜகத், மாயை என்ற பெயர் பெறுகிறது. மாயை நிலையாமையாகும். இந்த மாயா ஜகத்துக்கு நிலையான ஆதாரமாக இருப்பது பரம்பொருள். சினிமாக் காட்சிக்குத் திரை ஆதாரமாக இருப்பது போல, பரவஸ்து ஜகத்துக்கு ஆதாரமாக இருப்பதனால் அது நிலைத்த பொருளாக இருக்கிறது. காட்சி எத்தனை விதமாக மாறினாலும் திரை இருந்தது. இருந்தபடியே இருப்பது போல மாயாஜகத் எத்தனை ஜகத் ஜாலங்கள் செய்த போதிலும் பரமாத்மா அசைவதில்லை. எனவே அது நித்தியம். இந்த ஜகத் அநித்யம்.

2. **மத்திய இக பரங்களில் வரும் போகங்களில் நிராசை:** இது 'இஹ அமுத்ர பலபோகவிராக:' என்று வடமொழியில் சொல்லப்படுகிறது. அதாவது இம்மையிலும் மறுமையிலும் தர்மபலனை அனுபவிப்பதில் ஆசை கொள்ளாதிருப்பது என்பது பொருள். புலன்கள் வெளியே உள்ள பொருள்களில் ஆசை வைத்து அவற்றை அனுபவித்துத் தேய்ந்துபோய்த் தன் சக்தியை இழந்து விடுகின்றன. எந்தப் பொருள்கள் இன்பம் கொடுத்தனவோ அவையே முடிவில் துன்பம் தருகின்றன. எனவே ஆசையே அல்லல்களுக்கெல்லாம் காரணமாகிறது. 'ஆசை விடவிட ஆனந்தமாமே' என்பது ஆப்த வாக்கியம். முக்தியை விரும்பும் ஆத்மசாதகன் ஆசையை விடுவது அவசியமாகிறது. நிராசையே நிறைஞானமாக வந்தமைகிறது.

3. **சமாதி என்று ஆறு கூட்டம்**

**சமம்**-மனம் புத்தி சித்தம் அகங்காரம் முதலாகிய அந்தக்கரணங்களை அடக்குதல். காரியம் செய்யக் காரணமாக இருப்பது கரணம். சங்கல்ப விகல்பமானது மனம். அதைச் செம்மைப்படுத்தி நடுவுநிற்கச் செய்வது சாதனத்துக்கு இன்றியமையாதது ஆகும். நன்று இது, தீது இது என்று பாகுபடுத்தும் புத்தியைக் கொண்டு தீமைகளைக் களைந்து நன்மை தருவதைத் தேர்ந்தெடுப்பது அவசியமாகிறது. **சித்தம்** உணர்ச்சிவசப்பட்டு புறப் பொருள்களை நாடும் தன்மையது. அதை அகத்தில் அடக்கி வைப்பது அவசியமாகும். கர்மத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக்கிக் கொள்வது அகங்காரம். பிரகிருதியின் செயல்கள் அதன் போக்கில் நடந்து கொண்டிருக்கின்றன. பாராதி பூதத்தின் செயல்கள் எல்லாம் அதன் போக்கில் நடக்க வேண்டிய சீராக நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. அறியாமையினால் ஜீவாத்மா தான் செய்வதாக அகங்கரிக்கிறான். தான் அல்லாத ஒன்றைத் தான் என்று கருதுவதும் அகங்காரமாகும். எனவே அது அகற்றுவதற்கு உரியதாகும்.

தமம்—மெய் வாய் கண் மூக்கு செவி ஆகியவை புறக் கரணங்கள் அதாவது புறக் கருவிகள் ஆகும். இவை மெய் வாய் கண் மூக்கு காது ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களாகவும், வாக்கு (பேச்சு), பாணி (கைகள்), பாதம் (கால்கள்), பாயு (மலவாயில்), உபத்தம் (குறி) ஆகிய ஐந்து கருமேந்திரியங்களாகவும் பரிணமிக்கின்றன. இந்திரியங்கள் வெளியுலக சுகபோக விஷயங்களை அனுபவிப்பதற்காகப் புறத்தே ஓடுகின்றன. அவற்றைக் கட்டுப்படுத்தாமல் அவற்றின் போக்கில் அனுபவிக்க விடுவது ஆத்மசாதகனுக்கு இடையூறு ஆகும். புறத்தே செல்லும் அவற்றைத் தடுத்து அகத்தில் வைப்பது தமம் எனப்படும்.

விடல்—இதற்கு உபரதி என்பது வடமொழிச் சொல். நன்கு ஓட்டவும் நிறுத்தவும் தெரிந்துள்ள சாரதியின் மோட்டார்வண்டியில் பிரயாணம் செய்வதே ஆபத்தில்லாதது. அது போல, சாதகன் ஒருவன் உடலைக் கொண்டு உழைக்கத் தெரிந்து கொள்வது போன்று ஓய்வு எடுத்துக் கொள்ளவும் தெரிந்திருக்க வேண்டும். இது உபரதி அதாவது விடல் ஆகும். உலக விவகாரத்திலிருந்து விலகி

இருப்பதும், ஆசைகளை அகற்றுவதும் உபரதி ஆகிறது.

**சகித்தல்**—வடமொழியில் திதிட்சை எனப் படுகிறது. துன்பங்களைச் சகித்தல் என்பது அதன் பொருள். உழைப்புக்குத் தகுந்த ஊதியம் உண்டு. ஆனால் ஜீவாத்மா மயக்கத்தால் பேராசை கொள்கிறான். அந்த ஆசைகள் நிறைவேறாத போது துக்கத்திற்கு ஆளாகிறான். கஷ்டம் எப்படி வந்தது என்று முறையாக ஆராய்ந்தால் அதற்குத் தானே பொறுப்பாளியாக இருப்பது புரியும். சிந்திக்கும் போது சிரமமும் நீங்கிவிடும். சாதகன் ஆசைகளை அடக்குவதன் மூலம் சங்கடங்களைப் பொறுமையோடு சகிக்கலாம்.

**ஸமாதானம்**—சத்விஷயங்கள் எப்படியும் செவிக்கு எட்டுகின்றன. உலக ஆசை அதிகமாக உள்ள பத்தாத்மாக்கள் அந்தச் சத்விஷயங்களை ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் ஆத்மசாதகன் ஒருவன் கேட்ட நல்ல விஷயங்களை ஆழ்ந்து மனதில் பதிய வைத்துச் சிந்திக்க வேண்டும். மனத் திருப்தியோடு உண்மையாகவும் உறுதியாகவும் சிந்திக்க வேண்டும். அது மனதுக்குச் சமநிலையை உண்டாக்குகிறது. எனவே அது ஸமாதானம் ஆகிறது.

**சிரத்தை**—குரு சிரேஷ்டமானவர். அவரு டைய உபதேசங்களில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு அவற்றை உள்ளன்போடு உறுதிப்படுத்த வேண்டும். அத்துடன், வேதம் முதலான சாஸ்திரங் களைப் படிப்பதும் அவற்றின் உட்கருத்தில் மனதை நிலைநிறுத்துவதும் ஆகிய இவை சிரத்தை என்று சொல்லப்படுகின்றன.

4. **முமுட்சுத்வம்**—முக்தி அடைவதில் தீவிர நாட்டம் கொள்ளுவது முமுட்சுத்வம் எனப்படும். மாணிக்கவாசகர் 'உன்னருள் பெறுநாள் எந் நாளோ' என்று வருந்தியது போல விடுதலையைச் சிந்தித்து ஏங்கியிருப்பது.

இந்த நான்கும் முக்தியின் சாதனங்கள் ஆகின்றன.

சாதனை நான்கையும் சரியாய்ச் செய்தால்
வேதனை நீங்கி விடுதலை அடையலாம்.

ஒப்புள்ள பகவான் ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் சில வருமாறு :

எது நித்யமானது, எது அநித்யமானது என் பதைப் பாகுபடுத்துவது விவேகம். அநித்யமான வற்றில் பற்றற்று இருப்பது வைராக்கியம். விவே கமும் வைராக்கியமும் எடுத்த எடுப்பில் வாய்த்து விடா. ஒவ்வொரு நாளும் அவற்றைப் பழக வேண்டும்.

நூலின் இழை ஒன்று வெளியே நீட்டிக் கொண்டிருந்தாலும் அந்த நூலை ஊசியின் மூலம் காதில் செலுத்த முடியாது. உலக ஆசை அற்ப அளவுக்காகிலும் ஒருவனுக்கு இருக்குமானால் அவன் ஈச்வரானுபூதியைப் பெற முடியாது.

உன் இதயத்திலிருந்து அகங்காரம் முழுவதும் நீங்க வேண்டும். 'நான் கர்த்தா' என்ற எண்ணம் உன் மனதில் இருந்தால் நீ ஒருபோதும் ஈசுவரனைக் காணமாட்டாய். நானே 'கர்த்தா' என்று எவன் நினைக்கிறானோ அவனது உள்ளத்தில் ஈசுவரன் ஒருபோதும் தோன்றுவதில்லை.

பிரம்மஞானத்துக்காகப் பழங்காலத்து ரிஷிகள் என்ன பாடு பட்டார்கள்! அதிகாலையில் அவர்கள் ஆச்ரமத்திலிருந்து கிளம்பிச் சென்று தனிமையில் அமர்ந்துகொள்வர். பகல் எல்லாம் பரம்பொருளைப் பற்றியே அவர்கள் சிந்தித்தனர். இரவு ஆச்ரமத் திற்குத் திரும்பி வந்து, கனி, கிழங்கு ஏதோ சில வற்றை அவர்கள் புசித்தனர். பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் புறவுலகில் மனதைச் செல்லவொட்டா மல் அவர்கள் தடுத்து வைத்தனர். அப்படி முயன்றதன் பயனாகத் தங்கள் அந்தராத்மாவாகப் பிரம்மத்தை அவர்கள் அனுபூதியில் உணர்ந் தனர்.

குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்கள் இடையிடையே தங்கள் வேலைகளை முற்றிலும் ஒதுக்கி வைத்துவிட்டு, குறைந்தது மூன்று நாட்களுக்காவது இடைவிடாமல் ஆத்மசாதனத் தில் ஈடுபடுவது அவசியம்.

பாண்டவர்களுக்கு வனவாச துக்கம் ஒருபக்கம் இருந்தது என்றாலும் பகவத் பக்தியும் ஞானமும் ஒருசிறிதும் அவர்களை விட்டு அகலவில்லை. அத் தகைய பெருமக்களைக் காண்பது அரிதிலும் அரிது.




# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1979 ஏப்ரல் மாத நிகழ்ச்சிகள்

5-4-79 வியாழன் — ஸ்ரீராமநவமி, திதி பூஜை

8-4-79 ஞாயிறு — பொதுக் கூட்டம்: மாலை 5-30 முதல் 7 மணி வரை
தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்
சொற்பொழிவாளர்: டாக்டர் என். விழிநாதன்

**சத்சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 6-30 மணி வரை
ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (15-4-79 & 29-4-79)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (1-4-79 & 22-4-79)

மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை சொற்பொழிவு (தமிழ்)

1. ஸ்ரீமத் பாகவதம் —திரு 'அண்ணா' (1-4 79)
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (15-4-79)
3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் திரு வி. எஸ். வி. குருசாமி சாஸ்திரிகள் (22-4-79)
4. ஸ்ரீ பூதத்தாழ்வார் –டாக்டர் பாலசுப்பிரமணியம் (29-4-79)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சொற்பொழிவு (ஆங்கிலம்)

1. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் - சுவாமி தபஸ்யானந்தர் (1-4-79 & 15 4-79)
2. ஸ்ரீமத் பகவத் கீதை சுவாமி கபீரானந்தர் (22-4-79 & 29-4-79)

வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள் (மாலை 6-00)
வழக்கம் போல் திங்கட்கிழமை முதல் வெள்ளிக்கிழமை வரையிலும் நடைபெறும்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:** சனிக்கிழமைகளில் மாலை 6-00 மணிக்கு

1. இராமாயணம்—டாக்டர் என். விழிநாதன் (7-4-79)
2. பஜனை—(14-4-79 & 28-4-79)
3. ஸ்ரீமத் பாகவதம்—திரு பி. ராமகிருஷ்ணன் (21-4-79)

**விசேஷ தினங்கள்:**

29-4-79 ஞாயிறு : அந்தர் யோகம் (சாதனை தினம்)

8-4-79 & 22-4-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் நடத்தப்பெறும் வேறு சில நிகழ்ச்சிகள்**

22-4-79 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்
இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்

21-4-79 சனி மாலை 6-30 மணிக்கு ஸ்ரீமத் பகவத்கீதை
இடம் : இல. 18, 9–வது லேன், சாஸ்திரி நகர்

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

தொலைபேசி: 71231

தலைவர்,
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

